





* 67 இல் சுடப்பட்டு மருத்துவமனையில் இருந்த போது...

# எம்.ஜி.ஆர். வாழ்க்கை

## —புகைப்பட ஆல்பம்



உன்னைப் போல் எனக்கு
உற்ற துணை யாருமில்லை!
மனித உரிமைகள்


அமைதிப் படை


நீ என் கட்டுப்பாட்டில் இருக்கிறாய்!


மன்னிப்பு கேட்கணும்!
கிட்டலே... புருடா வுடாதே!
கிட்டவே இல்லே!
தமிழ்ப் பெண்
சோனியா
ஜனநாயக சோஷலிசம்!
குழாயடி




# கல்கி

1988 ஜனவரி 3
மலர் 46 இதழ் 23
பிரபவ மார்கழி 19




## பொன்மனச் செம்மல்

மனிதாபிமானத்தின் மொத்த உரு மறைந்து போனது; பொன்மனச் செம்மலை இழந்த தமிழகம் ஏழையாகிவிட்டது; மக்கள் திலகமிழந்து தவிக்கின்றனர்; கொடுத்துச் சிவந்த கரங்கள் ஓய்ந்து போயின.

புரட்சித் தலைவர், பொன் மனச் செம்மல், மக்கள் திலகம், டாக்டர் போன்ற பட்டங்களுள் எம். ஜி. ஆருக்கு நூற்றுக்கு நூறு பொருத்தமானது பொன் மனச் செம்மல் என்ற வர்ணனையே. இதற்கு நிரூபணமாக, அவரது திரை உலக வாழ்க்கையிலும் சரி, அரசியல் வாழ்க்கையிலும் சரி, அவரைக் குறைகூறி விமர்சித்தவர்கள் கூட அவரது மனம், பொன் மனம் என ஒப்புக் கொண்டதைக் கூறலாம். அந்தப் பொன்னான மனம்தான் படிப்பறியா ஏழைச் சிறுவனாக இருந்த அவரைப் படிப்படியாக வாழ்க்கையில் உயரச் செய்து, மாநில முதல்வர் பதவியில் அமர்த்தியது. சாமானிய நிலையிலிருந்து வளர்ந்த காரணத்தாலேயே அவரால் சாமானிய மக்களின் கஷ்டங்களைப் புரிந்து கொண்டு அனுதாபத்துடன் நடந்து கொள்ள முடிந்தது.

திரை உலகில் கொடி கட்டிப் பறந்து பணம் குவித்த போதே கொடுத்துக் கொடுத்துச் சிவந்த கரங்கள் அவருடையவை. அவருடைய படங்களையும் நடிப்பையும் குறை கூறி விமர்சித்தவர்கள் உண்டு. ஆனால் அவர் படம் எடுத்தது கிரிடிக்குகளுக்காக அல்ல. சாமானிய மக்களின் நலனை மனத்தில் கொண்டே அவர் படங்களைத் தயாரித்தார்; நடித்தார், அந்தப் படங்களில் அவர் காதலைப் போற்றினார், — முறை தவறிய காதலை அல்ல; வீரத்தை வளர்த்தார் — வன்முறையை அல்ல; நேர்மை, ஒழுக்கம், தேச பக்தி, இரக்கம், உழைப்பு, கடமை உணர்வு போன்ற உயர்ந்த குணங்களைத் தமது திரைப்படங்கள் மூலம் மக்களிடையே அவர் வளர்த்தார். இவை அவருடைய மனிதாபிமானத்தின் மறு வடிவங்களே.

இந்த மனிதாபிமானம் காரணமாகவே ஆட்சிக்கு வருவது அவருக்கு எளிதாயிற்று. ஆட்சியில் அமர்ந்த பிறகும் பொன் மனச் செம்மலின் மனிதாபிமானப் பணிகள் தொடர்ந்தன. இலவசச் சத்துணவில் ஆரம்பித்து இலவசக் காலணிகள் வரை பலப்பல பொருள்களை ஏழை மக்களுக்குக் கிடைக்கச் செய்தார். இதனைப் பொருளாதாரக் கண்ணோட்டத்தில் தவறு என்று விமர்சிப்பது சாத்தியமே. ஆனால் மனிதாபிமானம் என்பது பொருளாதார நியதிகளைக் கடந்து நிற்கும் ஒன்று. பொருளாதாரக் கண்ணோட்டத்தில் பார்த்தால் கூட, லோன் மேளா நடத்திக் காகித நோட்டுக்களை மக்களிடையே வாரிவிட்டுப் பண வீக்கத்தையும் விலைவாசி உயர்வையும் உருவாக்கி அவர்களை மேலும் துன்பத்தில் ஆழ்த்துவதை விட, உற்பத்தியான பொருள்களை இலவசமாக வழங்குவது எவ்வளவோ மேலானது.

எம். ஜி. ஆருடைய மற்றொரு சிறப்பியல்பு அவருடைய யதார்த்தப் போக்கும் அதன் விளைவாகக் காலத்துக்கு ஏற்பத் தமது கொள்கைகளை மாற்றிக் கொள்ளத் தயங்காத தன்மையும். இந்தப் பரந்த மனப்பான்மைதான் அ. தி. மு. க. என்ற பெயரை அ. இ. அ. தி. மு. க. என்று மாற்றியமைக்கத் தூண்டுதலாக இருந்தது. இந்த ஒரே ஒரு செயலின் மூலமே அவர் தேசிய ஒருமைப்பாட்டினை மிக அழுத்தமாக வலியுறுத்தி, பிரதேசப் பற்றைக் கடந்து நின்ற அனைத்திந்தியத் தலைவராகி விட்டார்! விடுதலைப்புலிகளை ஆதரித்து அரசு கஜானாவிலிருந்தே அவர்களுக்குப் பண உதவியும் செய்து வந்த அவர், இந்தியா — இலங்கை ஒப்பந்தம் கையெழுத்தான பின்னர் பிரத்யட்ச நிலையை உணர்ந்து அதற்கு முழு ஆதரவை அளித்தார். விடுதலைப் புலிகளை அவர் விரோதித்துக் கொள்ளவில்லை எனினும் அவர்கள் வன்முறையைக் கைவிட்டு அமைதி திரும்பவும் ஜனநாயகம் மலரவும் ஒத்துழைக்க வேண்டும் என்று விரும்பிச் செயலாற்றினார். திராவிடக் கழகப் பாரம்பரியத்தில் வந்த போதிலும் இறையுணர்வு மிக்கவராக மாறி மக்களின் மனங்களை முன்னெப்போதையும் விட அதிகமாகக் கவர்ந்தார்.

அவருடைய திடசித்தமும் அஞ்சா நெஞ்சமும் அவர் குண்டடிபட்ட நிலையிலும் துணை நின்றன; கடுமையாக நோய் வாய்ப்பட்டிருந்த நிலையிலும் கடமைகளைக் கடைசி வரை கவனிக்கத் தூண்டின.

எம். ஜி. ஆரின் ஆட்சியில் குறைகள் இல்லாமல் இல்லை; ஆனால் அவற்றை எண்ணிப் பார்க்கிற தருணம் அல்ல இது. நிறைகளை ஏற்று, குறைகளை இட்டு நிரப்பித் தமிழகத்தை அவர் கனவு கண்ட உன்னத நிலைக்கு உயர்த்த அனைவரும் உறுதி பூண வேண்டிய நேரம்.

இன்று அவர் உடல் அமைதிஅடைந்து விட்டது;ஆன்மா சாந்தி பெற்று விட்டது; தமிழக மக்களின் இதயங்களில் என்றென்றும் வாழும் அமரர் ஆனார், எம். ஜி. ஆர்.

கண்ணீர் விட்டுக் கதறும் தமிழகம், இப்படிப்பட்ட ஒரு தவப் புதல்வனைப் பெற்றதற்காகத் தலைநிமிர்ந்தும் நிற்கிறது.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# 87-ல்



* சொக்கலிங்கம்



* உஷா சுப்ரமணியம்



* இன்குலாப்



* மணிரத்னம்



* காந்தி

# இவர்களைப் பாதித்தவை...

**அவரவர் துறையில் தங்களைப் பாதித்த விஷயங்களைப் பற்றிச் சொல்கிறார்கள்......**

**டைரக்டர் மணிரத்னம்:**

இருபத்தைந்து ஆண்டுகளாகப் படங்களைப் பார்த்தும், ஏழு ஆண்டுகளாக திரைப் படத்துறையில் இருந்தும் கூட அந்தப் புகழ் பெற்ற டைரக்டரின் படத்தைப் பார்த்தது அதுவே முதல் தடவை. 'ஆர்ட்' பிலிம்கள் என்று தற்போது வெளிவருபவை என்னைப் பயமுறுத்தி இருக்கின்றன. நான் பார்த்த அந்தப் படம் மிகவும் மோசமான பதினாறு மி. மீ. பிரிண்ட்; படுமோசமான பிரிண்ட். இதை நான் பொருட்படுத்தவில்லை. அரங்கின் கதவுகள் அடிக்கடி திறந்து மூடிக் கொண்டிருந்தன. அதையும் நான் பொருட்படுத்தவில்லை. ஏனென்றால், நான் பொருட்படுத்தியது படத்தைத்தான். 1987 — இல் நான் பார்த்த பல திரைப்படங்களில் என்னை மிகவும் பாதித்தது அந்தப் படம்தான். அந்தப் படம்தான் சத்யஜித்ரேயின் 'பதேர் பாஞ்சாலி.'

— இவ்வாறு சொன்ன மணிரத்னத்திடம், "நிறையத் தமிழ்ப் படங்கள் பார்த்திருப்பீர்களே, அவை ஒன்று கூட மனத்தில் நிற்கவில்லையா?" என்று கேட்டதற்கு "இல்லையே! நான் பொய் சொல்ல முடியுமா?" என்று திருப்பிக் கேட்டார்.

**எழுத்தாளர் உஷா சுப்ரமணியம்:**

நான் நிறையப் படிப்பவள். 1987 —இல் எத்தனையோ நாவல்களையும், சிறுகதைகளையும் படித்திருக்கிறேன். சட்டென்று மனத்தில் நின்றது பாலகுமாரனின் 'நிழல் யுத்தம்' நாவல்தான். தற்போது இலக்கியத் தரம் வாய்ந்தவை என்று வெளிவரும் பல கதைகளைப் படிக்க முடியவில்லை. அவ்வளவு கரடு முரடாக எழுதுகிறார்கள். ஆனால், 'நிழல் யுத்தம்' சுலபமாகப் புரியக் கூடிய முறையில், எழுதப்பட்ட நல்ல இலக்கியத் தரம் வாய்ந்த கதை. மனித மனத்தின் உள்ளுணர்வுகளை நுட்பமான முறையில் வெளிக் கொணர்ந்து காட்டியிருக்கிறார். சமுதாயத்தின் இரண்டு மாறுபட்ட பகுதிகளிலிருந்து வரும் இருவர் திருமண பந்தத்தில் மாட்டிக் கொண்டு படும் அவஸ்தைகளைத் தெளிவாக விளக்கியிருக்கிறார். ஆண் — பெண் உறவுகளைப் பலர் கொச்சைப்படுத்திக் காசாக்கும் போது, அந்த உணர்வுகளுக்கு அங்கீகாரம் கொடுத்து மரியாதையை வரவழைக்கிறார். தலைமுறை இடைவெளியைப் பற்றி விளக்குகிறார். மனித உறவுகள் பற்றிக் கோடிட்டுக் காட்டுகிறார். கங்கிராட்ஸ் பாலகுமாரன்!

**டாக்டர் சொக்கலிங்கம்:**

1987 — இல் இந்தியாவில் மருத்துவத் துறையில் குறிப்பிடத்தக்க கண்டுபிடிப்பு எதுவும் இல்லையென்றாலும், பாராட்டத் தக்க முறையில், பல புதிய முயற்சிகள் அறிமுகமாகி இருக்கின்றன. அவற்றில் நான் மிகவும் போற்றி வரவேற்பது 'Baloon Coronary Angio Plasty' எனப்படும் இதய நோய்க் கான சிகிச்சை. இதயத்திற்கு ரத்தத்தை எடுத்துச் செல்லும் ரத்த நாளம் ஓரிடத்தில் அடைபட்டுப் போய்விட்டால், பை—பாஸ் சர்ஜரி ஒன்றுதான் வழி என்ற நிலையை மாற்றி, இந்தப் பலூன் சிகிச்சை பரவ ஆரம்பித்திருக்கிறது. உடம்பில் ஏதோ ஒரு வசதியான பகுதியிலிருந்து ரத்த நாளங்களின் மூலம் மெலிதானதொரு கருவியை ஒரு குழாயுடன் இணைத்து உட்புகுத்தி, அடைபட்டிருக்கும் பகுதியை மெல்ல மெல்ல அடைகிறார்கள். பலூன் சற்றே விரியும் போது ரத்த நாளமும் இலேசாக விரிவடைய, அடைப்பு ரத்த ஓட்டத்தில் கரைந்து ஓடிச் சென்று விடுகிறது. அடைப்பு நீங்குகிறது. நுட்பமான முறையில் செய்யப்படும் இந்தச் சிகிச்சை சென்னையில் டாக்டர் கிரிநாத்தால் செய்யப்படுகிறது.

**சீனியர் வழக்கறிஞர் காந்தி:**

1987 — இல் எத்தனையோ உயர்நீதிமன்ற உச்சநீதிமன்றத் தீர்ப்புகள் வந்திருந்தாலும், எனக்கு நினைத்தவுடன் தோன்றுவது பச்சையப்பா அறநிலையம் (Pachaiappa Trust) பற்றிய வழக்கொன்றில் நீதிபதிகள் ராமசாமியும், பெல்லியும், வழங்கிய தீர்ப்புத்தான். அறநிலையங்கள் எல்லாம் தமக்கென சில நல்ல குறிக்கோள்களை வகுத்துக் கொண்டு, மக்களுக்காகத் தொண்டு செய்து கொண்டிருக்கின்றன. அப்படிப்பட்ட அறநிலையங்களின் செயல்பாட்டில், அரசாங்கம், ஓர் ஆணையின் மூலம் மூக்கை நுழைப்பது எவ்வளவு தவறு என்பதை நீதிபதிகள் சொல்லியிருக்கிறார்கள். பல்வேறு உயர்நீதிமன்ற, மற்றும் உச்ச நீதிமன்றத் தீர்ப்புக்களை அலசி ஆராய்ந்து சொன்ன தீர்ப்பு இது. அறநிலையங்களில் உள்ள பணம் பொது மக்களின் நன்மைக்காகச் செலவிடப்படுகிறது. அந்தப் பணத்திலும் கொள்ளை அடிக்கலாம் என்ற மனப்போக்கில் கொண்டு வரப்பட்ட அரசின் ஆணையைக் கண்டனம் செய்து வெளியிடப்பட்ட இந்தத் தீர்ப்பு 1987 —ன் மிகச் சிறந்த தீர்ப்புக்களில் ஒன்று.

**கவிஞர் இன்குலாப்:**

தங்களைச் சரியானபடி பிறருக்கு உணர்த்த ஈழத்துப் பெண் கவிஞர்கள் பதினொரு பேர் தேடிக் கொண்ட சொற்களாக 'சொல்லாத சேதி' என்ற கவிதைத் தொகுப்பு வந்திருக்கிறது. 'ஆணின் அடக்கு முறையையும், அரசியல் அடக்கு முறையையும்' இவர்கள் இதில் கண்டனம் செய்கிறார்கள்.'



''சொந்த ஊரில் நடக்கிற ஆரம்பப் பள்ளி ஆண்டு விழாவுக்கு அமைச்சர் வர மறுத்துட்டாராமே... ஏன்?''

.''அந்தக் காலத்தில் அவரை மூன்றும் வகுப்பில் மூணு வருஷம் ஃபெயிலாக்கிய ஆத்திரம் இன்னும் அடங்கவில்லையாம் அவருக்கு!''

— சாதிக்பாஷா.

இனவெறி அரசுகளின் வன்முறை, உரிமை கோரும் முகங்களை எல்லாம் சிதைக்கிறது. பெண்களைப் பாலியல் ரீதியாகப் பலாத்காரம் செய்கிறது. மானுடத்தின் கறை படிந்த இந்த வரலாறு, இன்றும் ஈழத்தில் தொடர்கிறது.

இந்தக் கொடுமைக்கு எதிரான ஒரு குரலாகத்தான் சி. சிவரமணியின் 'முனைப்பு' என்ற கவிதை ஒலிக்கிறது.

'பேய்களால் சிதைக்கப்படும்
பிரேதத்தைப் போன்று,
சிதைக்கப்பட்டேன்...'

என்று தொடங்கும் இக்கவிதையில் அந்தப் பலாத்காரக் கணங்களில் அவள் போராடிய அவலம் இவ்வாறு:

என்னை மேகத்திற்குள்ளும்
மண்ணிற்குள்ளும்
மறைக்க எண்ணிய வேளையில்
வெளிச்சம் போட்டுப் பார்த்தனர்.

பிறகு... 'என்றைக்குமே அவள் தலைகுனிந்து போனதாய் அவர்கள் கனவு கண்டனர். ஆனால்...!'

நான் வாழ்ந்தேன்
வாழ்நாளெல்லாம் நாளுக
இருள்நிறைந்த பயங்கரங்களின் ஊடாக
நான் வாழ்ந்தேன்.
இன்னும் வாழ்கிறேன்.

நமது புலன்கள் மரத்துப் போகாமலிருந்தால் அவளை நாம் இன்றும் அடையாளம் காணலாம்.

1987 — இல் நான் படித்த பல கவிதைத் தொகுப்புக்களில் என்னைப் பாதித்தது இந்தத் தொகுப்புத்தான்.

பேட்டி: ப்ரியன்

# சங்கீதத்தையும் விட்டு வைக்கவில்லையே...

நியாயமான சந்தேகத்தை எழுப்பியுள்ள தங்க வின் இந்த வாரத் தலையங்கம் ஈழத் தமிழர்களின் வார்த்தைகளையே பிரதிபலிப்பதாக இருந்தது. தங்க வின் கருத்துக்கு இந்திய அரசாங்கம் செவி சாய்க்க வேண்டும் என்பது எங்களின் ஒருமித்த குரல்!

மயிலாடுதுறை. இ. எழில்.

இவ்வாரம் வெளியான மூன்று சிறுகதைகளில் இரண்டு சங்கீதம் சம்பந்தப்பட்ட கதைகள் என்பது விசேஷம்! அதிலும் "இறக்க முடியாத கதவுகள்—கதை மிகச் சாதாரண நடைமுறைக் கருவை வைத்து, அசாதாரண நடையில் எழுதப்பட்ட வித்தியாசமான, கதை!

குத்தாலம். எஸ். ராஜா.

இவ்வளவு அற்புதமான யோசனைகளைக் கூறும் தளபதி இடமதியார் கூடிய சீக்கிரம் அமைச்சராகி விடுவார் என்பதில் ஐயமில்லை.

நெய்வேலி—2. அ. கொளஞ்சி கணபதி.

அரஸின் கை வண்ணத்தில் ஆர். எஸ். மனோகரின் படம், கம்பீரமான அழகோடு கல்கியின் அட்டையை அலங்கரித்தது அருமையிலும் அருமை.

நந்தியநல்லூர். க. இளங்கோ.

'ராகமும் தானமும்' சிறுகதையில் பணத்திற்காகத் தன் பிள்ளைகளின் தொல்லைகளைச் சிறிதும் லட்சியம் செய்யாமல், தன் கணவரின் தன்மான உணர்வை அழிக்க விடாமல் காப்பாற்றிடும் அந்தச் சீதம்மாப் பாட்டியின் பாத்திரம் நெஞ்சில் நிறைந்தது. அனுராதா ரமணன் அவர்களுக்குப் பாராட்டுக்கள்!

சீர்காழி. சன்னை. கி. சண்முகம்.

தமிழிசைச் சங்கத்தின் ஹீரோ, மனோகரின் பேட்டி படித்தேன். மிகச் சுவையாக இருந்தது. கள்ள வீடியோ அதிகரித்துள்ள இந்த நேரத்தில், தமிழ்ப் பாரம்பரியம் மிக்க நாடகம் தரும் மனோகரின் நன்னம்பிக்கையை நான் பெரிதும் வரவேற்கிறேன்.

சீர்காழி, தஞ்சை. எஸ். சண்முகசுந்தரம்.

20.12.87 இதழ் இசை இதழாக மலர்ந்துள்ளது. பாராட்டுதற்குரியது. 'ஏன் கர்நாடகம்' பகுதி சிந்தனைக்கு நல் விருந்தாக அமைந்து விட்டது. பழம் பெரும் இசைக் கலைஞர்களின் போட்டோக்களைப் பிரசுரித்துள்ளதும் மிக அருமை.

நாகப்பட்டினம். செல்வி. வே. உமா.

இசைக்கு மொழி, மதம், நாடு என்ற பேதம் கிடையாது என்பது போல் நாதஸ்வர வித்வான் ஷேக் சின்ன மௌலானா வாழ்க்கையும் அமைந்திருக்கிறது என்பதை அறியும் போது நமக்கு ரொம்பப் பெருமையாகவும், சந்தோஷமாகவும் இருக்கிறது.

லால்குடி. எம். ராஜேந்திரன்.

'சண்டைகள் ஓய்ந்தாலே சங்கங்கள் இணைந்து விடும்; சங்கங்கள் இணைந்தாலே சண்டைகள் ஓய்ந்து விடும்' என்ற நிலை, நம் நாட்டுச் சங்கீதத்தையும் விட்டு வைக்கவில்லையே என்று ஆதங்கப்பட வைத்தது பேட்டிக் கட்டுரை.

சென்னை—14. ஐயாறு எஸ். வாசுதேவன்.

இலங்கையில் நாள்தோறும் கொல்லப்பட்டு வரும் தமிழர்களுக்கு அனுதாபம் தெரிவித்தும், எஞ்சியுள்ள தமிழர்களின் உயிருக்கும்—உடைமைக்கும் பாதுகாப்பு வேண்டும் எனக் கேட்டுக் கொள்வதற்காகவும், ஜெயவர்த்தன அரசின் அடாவடித்தனத்தைக் கண்டித்தும், அமைதிப்படை என்ற பெயரில் இந்திய ராணுவம் தமிழ் மக்களைக் கொடுமைப்படுத்தும் சிறுமைத்தனத்தையும் ஊருக்கும், உலகுக்கும் எடுத்துக் காட்டும் வகையிலும்தான் தமிழ் நாடெங்கும் தமிழர்களால் 'மனிதச் சங்கிலி' நிகழ்ச்சி நடத்தப்பட்டது. ஆனால் தாங்களோ மனிதச் சங்கிலியில் ஈடுபட்டோர் "மோதிரம்" திருடுபவர் என்று துணுக்குப் பிரசுரிக்கிறீர்கள். இது அந்நிகழ்ச்சியையே மாசுபடுத்துவதாக இருக்கிறது.

முத்துப்பேட்டை. ந. தருமலிங்கம்.

நாயகன் படம் பற்றிய தராசுவின் கருத்தினை ஏற்பதற்கில்லை. படத்தில் பங்கு பெற்ற நட்சத்திரங்களின் நடிப்பாற்றல், தொழில் நுட்பத் தரம், மற்றும் படத்தின் கலை அம்சங்களுக்காகத்தான் அப்படம் ஆஸ்கார் விருதுக்கு அனுப்பப்பட்டதேயன்றி, வேறெந்தக் காரணங்களுக்காகவும் அல்ல. அவர் கூற்றுப் படியே வைத்துக் கொண்டாலும், வன்முறைப் பாதையில் செல்லும் படத்தின் நாயகன், இறுதியில் வன்முறைக்கே பலியாவதன் மூலம் 'எந்தப் பிரச்னைக்கும் வன்முறை தீர்வாகாது.' என்ற கருத்து படத்தில் வலியுறுத்தப்பட்டிருக்கிறதே!

சென்னை—15. சைதை.வி. முரளி.

'நாயகன்' படம் பார்த்து மிக மிகத் துயரத்துடன் வெளியே வந்தேன். நடிப்பு, தொழில் நுட்பத்திறன் ஆகியவை நன்றாக இருந்தாலும் அதன் செய்தி மிக மோசமாக இருப்பது கண்டு மனம் கொதித்தேன். 'தேசத்துரோக, சட்டவிரோத நடவடிக்கைகளில் ஈடுபடுகிற ஒரு நபர் ஏழைகளுக்கு உதவுவதாலேயே நல்லவனாகி விடுவதா என்ன! எல்லாரும் வேலு நாயக்கர் மாதிரியானால் நாடும் வீடும் என்ன ஆவது?' இப்படியெல்லாம் சிந்தித்துக் கொதித்துக் கொண்டிருந்த போது, தராசுவின் பதிலில் நாயகன் படத்தைப் பற்றி எழுதியிருந்ததைப் படித்து ஆனந்தமடைந்தேன். என் மனப் புண்ணுக்கு மருந்திட்ட மாதிரியிருந்தது. தங்களது தரமான பார்வைக்கு எனது மனமார்ந்த பாராட்டுக்கள்.

சென்னை—90. ஜெயரதன்.

# மகிழ்ச்சிகரமான பிறந்தநாளா உங்களுக்கு!
# மகிழ்ச்சிகரமான மணநாளா உங்களுக்கு!
# பிறந்த நாள் - மணநாட்களை முழு வித்தியாசமான முறையில் கொண்டாடுங்கள்



பிறந்த நாள், மணநாட்களை மகிழ்ச்சியாக கொண்டாடும் பழக்கம் உலக முழுவதும் அனைவருக்கும் பொதுவானது. ஆனால் சின்னஞ்சிறார்கள் விஷயத்தில் இவ்விழா இன்னும் அதிக முக்கியத்துவம் அடைகிறது. இக்கொண்டாட்டங்களுக்கு வயது ஒரு தடையில்லை.

விருந்தும், இனிப்பு வழங்குதலும் வேடிக்கை விளையாட்டுகளும் இவ்விழாக்களில் தனித்தன்மையாகும். மலர் மாலைகள், அன்பளிப்புகள், பணம் இவைகள் நம்மை விரும்புபவர்களால் நமக்குக் கொடுக்கப்படுகிறது.

ஆனால் இவைகள் அனைத்திற்கும் பணமே மிகவும் அவசியம். இந்த சந்தர்ப்பங்களில் நாம் எப்போதாவது எளியோரையும் நோயுற்றோர்களையும் சிறிதளவாவது எண்ணிப் பார்ப்போமா? தேவையுள்ளோருக்கு ஒரு நன்மை செய்தல் என்பது நமக்கு திருப்தியளிக்காதா?

இதற்கு விழாக்களை சிறப்பாகக் கொண்டாடுங்கள். ஆனால் அன்பையும், இரக்கமும், ஆசியும் வேண்டி நிற்கும் அனாதைக் குழந்தைகளைப் பற்றியும் சிறிது எண்ணிப் பாருங்கள்.

இப்படிப்பட்ட ஆதரவற்றவர்களின் நலனுக்காக ஏதாவது நாம் வழங்காவிட்டாலும், மேற்கண்ட கொண்டாட்டங்கள் நிறையுறாது. இக்கொண்டாட்டங்கள் ஆண்டிற்கு ஒரு முறை தானே வருகிறது. அடிக்கடி வரவில்லையே. அந்நாளில் இக்குழந்தைகள் மீதும் கருணைப் பார்வை விழுமானால் அவர்களுடைய வாழ்த்துக்கள் உங்களையும், தங்களுக்கு உரியவர்களையும் வாழ வைக்கும்.

தாங்கள் தங்களது நன்கொடையினை ஒரு பொது நிதியாகவோ அல்லது கட்டிடமானியமாகவோ அளிக்கலாம்.

உதாரணத்துடன் செயல்படுங்கள். திருப்தி கொள்ளுங்கள். சிவானந்த ஆசிரமத்திற்கு தாராளமாக உதவுங்கள்.

தாங்கள் அனுப்பும் நன்கொடைகளை ''சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்'' என்ற பெயருக்கு பணவிடை, அஞ்சல் ஆணையாகவோ, காசோலையாக அளிக்கலாம்.

அனுப்ப வேண்டிய முகவரி:

நிர்வாகி,
சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்''
நெ.20, கம்பர் தெரு,
கிழக்குத் தாம்பரம், சென்னை 600 059.
தொலைபேசி எண்கள்: 401078, 402354



பாடசாலை வித்யார்த்திகளில் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ. கோவிந்த தீக்ஷிதரவர்களால் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 85 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க சுமார் ரூ 250/— ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 2500/— மூலதனம் ஏற்படுத்தியோ அல்லது அவ்வப்போது ரூ 250/— அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்;

அத்வைத வித்யாசார்யா மஹா ராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி
D—76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,
கும்பகோணம்—612 001.

இந்த நன்கொடைக்கு 80G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு.



# "எனது சிறுநீரகத்தை விற்கத் துணிந்தேன்!"

— அதிர்ச்சி தரும் ரிப்போர்ட்

• நவநீதகிருஷ்ணன்.

'இருபத்தைந்து வயது இளைஞரின் சிறுநீரகம் ஒன்று தகுந்த சன்மானத்திற்கு வழங்கப்படத் தயாராய் இருக்கிறது' என்று ஹிந்துவில் வந்த விளம்பரத்தைக் கண்டதும் நமக்கு ஒரு ஷாக்! உடனடியாகக் கோவையிலிருக்கும் அந்த விளம்பரதார இளைஞரைச் சந்தித்தோம். "சிறுநீரகத்தை விற்க வேண்டிய அளவுக்கு என்ன பிரச்னை?" — அவரிடமே கேட்டோம்.

"எனக்கு அவசரமாக இருபத்தைந்தாயிரம் ரூபாய் பணம் தேவை. அதுதான் காரணம்."

"அதற்குச் சிறுநீரகத்தை விற்றுத்தான் ஆக வேண்டுமா?"

"வேறு வழி எனக்குத் தெரியவில்லை!"

"அப்படியென்ன அவசரத் தேவை?"

"என் முதலாளிக்குத் தர வேண்டியிருக்கிறது."

"எதற்காகத் தர வேண்டும்? ஏதும் அவரிடம் கடன் வாங்கியிருக்கிறீர்களா?"

"கடன் ஏதும் வாங்கவில்லை சார். அது ஒரு சோகக் கதை. சொல்கிறேன். எனது சொந்த ஊர் திருநெல்வேலி மாவட்டம். அம்மா இல்லை. அப்பா மட்டும்தான் அங்கே இருக்கிறார். கிடைக்கும் வீட்டு வாடகையில் ஜீவனம் நடத்துகிறார். சகோதரர்கள் அவரவரும் தங்கள் வேலைகளுக்காக வெளியூர்களில் இருக்கிறார்கள்.

"நான் கோவையிலுள்ள தில்குஷ் என்னும் பிரஷர் குக்கர் ஏஜென்ஸியில் சேல்ஸ்மேனாகப் பணியாற்றிக் கொண்டிருக்கிறேன். அதனால் மாதத்தில் இருபது நாட்கள் வெளியூர்களில் சுற்றுப்பயணம் செய்து பணம் வசூல் செய்வேன். வசூலான பணத்தை அப்படியே எடுத்து வந்து முதலாளியிடம் கொடுப்பேன். இதுதான் என் வழக்கமான வேலை.

"இந்நிலையில்தான் நான் கடந்த 2.11.87 முதல் 20.11.87 வரை சேலம் போன்ற இடங்களில் சுற்றுப் பயணம் செய்து சுமார் பதினைந்தாயிரம் வரையிலான பணத்தையும் மற்ற தஸ்தாவேஜுகளையும் சூட்கேஸில் வைத்துக் கொண்டு கோவைக்குத் திரும்பினேன். சேலத்திலிருந்து புறப்பட்ட பஸ் ஈரோடு பஸ் நிலையத்தில் நின்றபோது, என் அருகிலிருந்த நபரிடம் என் சூட்கேஸைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டுச் சிறுநீர் கழிக்கச் சென்றேன்.

"நான் திரும்பி வந்தபோது சூட்கேஸைக் காணவில்லை. பக்கத்திலிருந்த நபரோ நான் வரும் முன்பே, கீழேயுள்ள கடையில் பிஸ்கட் வாங்குவதற்காக இறங்கிச் சென்றுவிட்டுப் பிஸ்கட் பாக்கெட்டுடன் வந்து கொண்டிருந்தார். என்ன செய்வது? குழம்பிய நான் பஸ் ஸ்டாண்டிலிருந்த போலீஸாரிடம் முறையிட்டேன். அவர்கள் டவுனுக்குச் சென்று ஸ்டேஷனில் புகார் கொடுக்கச் சொன்னார்கள்.

"அப்போது இரவு சுமார் ஏழே முக்கால் மணி இருக்கும். ஈரோடு நகரக் காவல் நிலையத்தின் சப் — இன்ஸ்பெக்டரிடம் நடந்ததைக் கூறினேன். புகார் பதிவு செய்யச் சொன்னேன். அப்போது அவர், பணத்தை நானே மறைத்து வைத்துக் கொண்டதாக எண்ணினாரோ என்னவோ, என் முதலாளியும் வந்து புகார் கொடுத்தால்தான் பதிவு செய்ய முடியும் என்று சொல்லி, வெறுமனே ஒரு வெள்ளைப் பேப்பரில் மட்டும் எழுதி வாங்கிக் கொண்டார்.

"நான் வேறு வழியின்றி ஈரோட்டிலிருந்தே என் முதலாளிக்குத் தந்தியடித்து விஷயத்தைச் சொன்னேன். எனது நண்பர் ஒருவருக்கும் விஷயத்தைச் சொல்லி, அடுத்த நாள் செலவுக்குப் பணமும் எடுத்து வரச் சொன்னேன். அவர்கள் அப்படியே அடுத்த நாள் வந்தார்கள்.

"அனைவரும் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றோம். அப்போதுதான் புகாரைப் பதிவு செய்தார்கள். அதுவும் முதல் நாளைய தேதி, நேரம் போன்றவற்றை எழுதச் சொல்லி என்னிடம் கையெழுத்துப் பெற்

ளூர்கள். அதோடு, என்னிடம் இருபத்தைந்தாயிரம் ரூபாய்க்குப் பாண்டு எழுதிப் பெற்றுக் கொண்டார்கள்; — ஒரு மாத காலத்திற்குள் பன்னிரண்டு சதவிகிதவட்டியுடன் அந்த இருபத்தைந்தாயிரம் ரூபாயைத் திருப்பித் தருவதாக நான் உறுதியளிப்பதாக எழுதிப் பெற்றுக் கொண்டார்கள். சாட்சிக்கு எனது நண்பரையே கையெழுத்துப் போட வைத்தார்கள். பிறகு நான் என்ன செய்ய முடியும்? ஒரு மாத கெடு முடியும் நிலை வந்ததால் வேறு வழியின்றி எனது சிறுநீரகம் ஒன்றைக் கொடுத்து அப்பணத்தைப் பெறத் துணிந்தேன். வேறு வழியில்லை...''

''ஏன் இல்லை? உங்கள் சகோதரர்களிடம் கேட்டுப் பெற்றிருக்கலாமே?'' என்று நாம் கேட்ட போது, ''நான் யாரிடமும் கேட்கத் தயாராய் இல்லை. முடிந்தவரை என் சொந்தக் காலிலேயே நிற்க வேண்டுமென்று விரும்புகிறேன்...'' என்றூர் நவநீதன் என்ற அந்த இளைஞர்.

சரி, நவநீதகிருஷ்ணனின் முதலாளி கே. வி. ஷா என்ன சொல்கிறார்? அவரைச் சந்தித்தோம். ''அந்தப் பணத்தை நிஜமாகவே அவன் இழந்து விட்டானு அல்லது தானே எடுத்துக் கொண்டு விட்டானு என்பதைப் போலீஸ்தான் விசாரித்துக் கண்டறிய வேண்டும்...'' என்று ஒரே வரியில் சொன்னாரே தவிர, விளக்கமாகப் பேச அவர் தயாராய் இல்லை.

ஆக மொத்தம் நாம் என்ன முடிவுக்கு வருவது?

சுமார் பதினைந்தாயிரம் ரூபாய் அளவுக்கு சூட்கேஸில் இருக்கும் போது அன்று நவநீதகிருஷ்ணன் அவ்வளவு அலட்சியமாக நடந்து கொண்டதை மன்னிக்க முடியாதுதான். பஸ்ஸில் ஒரு சக பயணியிடம் 'பெட்டியைப் பார்த்துக் கொள்ளுங்கள்' என்று கூறி விட்டுப் போனது பொறுப்பற்ற செயலே.

ஆனால் நவநீத கிருஷ்ணன் தானே பணத்தை எடுத்து வைத்துக் கொண்டு திருட்டுப் போய் விட்டதாகப் பொய் சொல்கிறார் என்பதையும் நம்ப முடியவில்லை. அப்படி ஏமாற்றுவது அவர் நோக்கமாக இருந்தால் தமது சிறுநீரகத்தை விற்றேனும் பணத்தைத் திருப்பித் தருகிறேன் என்று சொல்வாரா? அதற்கான நடவடிக்கையில் இறங்குவாரா?

சிறுநீரகத்தை விற்பதாகக் கூறுவதும் விளம்பரம் செய்ததும் கூட தன் மீது அனுதாபம் பிறக்க அவர் நடத்தும் நாடகம் என்று ஒரு வழக்கறிஞர் வாதாடக் கூடும் என்றாலும் அந்த வாதத்தில் வலிமை இராது என்றே தோன்றுகிறது.

நவநீத கிருஷ்ணனை வேலைக்கு வைத்துக் கொண்ட நிறுவனம், பணம் கலெக்ஷனுக்கு அவரை அனுப்பத் தீர்மானித்திருந்த போது முன் கூட்டியே செக்யூரிடி டெபாஸிட் வாங்கியிருக்க வேண்டும் அல்லது இதற்கென உள்ள இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தைப் பயன்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். இரண்டு அம்சத்திலும் தவறிவிட்டுத் தவிப்பதாகவே தோன்றுகிறது.

போலீஸார் நடந்து கொண்ட விதம் தான் ஆச்சர்யமாகவும் ஆட்சேபனைக்குரியதாகவும் இருக்கிறது.

●● ஈரோடு பஸ் ஸ்டாண்டிலிருந்த போலீஸாரிடம் சூட்கேஸ் திருடு பற்றிப் புகார் செய்த போது அவர்கள் திருடனைப் பிடிக்க உடனே ஆர்வம் காட்டாமல் இருந்ததேன்?

●● திருடு கொடுத்தவர் புகார் கொடுக்கச் சென்ற போது அதைப் பதிவு செய்யாமல் அந்த சப் — இன்ஸ்பெக்டர் நவநீதகிருஷ்ணனின் முதலாளி வந்தால்தான் புகாரைப் பதிவு செய்ய முடியும் என்று சொன்னது எந்த விதத்தில் நியாயம்?

●● அடுத்த நாள் பதிவு செய்த புகாரை முதல் நாள் தேதியிட்டதற்கு என்ன காரணம்?

●● புகார் கிடைத்ததும் அதை விசாரித்துப் புலனாய்வு மேற்கொள்வதில் ஆர்வம் காட்டாமல், போலீஸாரே நவநீதகிருஷ்ணனிடம் பாண்டெழுதி வாங்குவதில் ஆர்வம் காட்டியது ஏன்?

●● நவநீதகிருஷ்ணன் மீதே போலீஸுக்குச் சந்தேகமிருக்குமானால் கடந்த ஒரு மாத காலத்துக்குள் அதனைத் துப்புத் துலக்கி உண்மையைக் கண்டறிந்திருக்க அவர்களால் முடியாதா?

●● ஈரோடு பஸ் நிலையத்தில் அடிக்கடி இப்படி சூட்கேஸ் திருட்டு நடைபெறுவதாகப் பலரும் பேசிக் கொள்ளும் சூழ்நிலையில்தான் போலீஸ் இப்படி மெத்தனமாக நடந்து கொண்டிருக்கிறது!

— போலீஸ் மேலதிகாரிகள் நேரடியாகத் தலையிட்டு ஆர்வம் காட்டி விசாரிப்பார்களா?

**— நமது நிருபர்கள்.**

புகைப்படம்: **கே. வி. ஆனந்த்**



இவர்: அஞ்சு வருஷத்துக்கு ஒரு தடவை ஓட்டுக் கேட்க மட்டும், கரெக்டா வந்துடுவீங்களே...?

அரசியல்வாதி: நான் என்னய்யா பண்ணட்டும்...? அஞ்சு வருஷத்துக்கு ஒரு தடவைதானே தேர்தல் வருது...?

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.

## 12

# வேரில்லாத மரங்கள்

சிவசங்கரி

மூச்சிரைத்தது.

நாலு படிகளைத் தொடர்ந்து ஏற முடியாமல் அடிவயிற்றின் கனம் ஆளை அசத்தியது.

தொண்டைக் குழியில் என்னவோ சிக்கிக் கொண்ட மாதிரி மூச்சு சிரமத்துடன் வெளிப்பட்டது.

வசந்தா அரை நிமிஷம் மேல்படியில் நின்று தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டாள்.

இன்னும் ஏற வேண்டிய படிகள் பூதமாய்ப் பயமுறுத்தின.

தினமும் இது ஓர் அவஸ்தை...

வந்தோமா, இருக்கையில் சென்று அமர்ந்தோமா, வேலையை மளமளவென்று கவனிக்க ஆரம்பித்தோமா என்று இல்லாமல், இரை தின்ற மலைப்பாம்பு மாதிரி மெல்ல மூன்று மாடிகளை ஏறி, அலுவலகத்துக்குள் காலடி வைக்கையில் போதும் போதும் என்றுதான் ஆகிவிடுகிறது.

சாதாரண நாட்களிலேயே இப்படி லொங்கு லொங்கென்று மாடிப்படிகளில் ஏறுவது அவளுக்குப் பிடிக்காது. இப்போது கல்லைக் கட்டித் தொங்கவிட்ட தினுசில் வயிற்றுச் சுமையையும் சுமந்து கொண்டு, பத்துப் படிகளுக்கு ஒரு தரம் சிரமப் பரிகாரம் செய்து, நாலு பேர் நமுட்டாகச் சிரிப்பதை லட்சியம் செய்யாமல் ஏறி வருவதற்குள் 'சீ' என்றுதான் அலுத்துப் போகிறது.

வசந்தா தனக்குத்தானே 'ப்ச்' என்று சூள் கொட்டிக் கொண்டு, புடைவைத் தலைப்பால் நெற்றியில் குண்டூசி குண்டூசியாகத் துளிர்த்த வியர்வைத் துளிகளைத் துடைத்துக் கொண்டாள்.

நின்றது போதும் என்கிற எண்ணத்துடன் கொஞ்சம் வேகமாகப் படிகளில் ஏற முற்பட்டாள்.

வழக்கமாகச் சுமக்கும் டிபன் டப்பா அடங்கின கைப்பையோடு, புடைவை ரவிக்கை வைத்த மற்றொரு பையும் சேர்ந்து கொண்டு தோளிலிருந்து தொங்கிக் கனமாய் கனத்தது.

அன்று மாலை அவளுடைய நெருங்கின சிநேகிதி ரோஸலினுக்குச் சாந்தோம் சர்ச்சில் திருமணம். இவள் செய்து கொண்டதைப் போல அல்லாமல், பெரியவர்கள் முன் நின்று செய்து வைப்பதால், சர்ச்சில் உற்றாரும், சுற்றாரும் சூழத் தடபுடல் அமர்க்களத்துடன் நடக்கவிருக்கும் வைபவம்.

இவள் வீட்டுக்குத் தானே நேரில் வந்து ரோஸலின் அழைப்பிதழைத் தந்து "உன் கல்யாணத்துக்கு என்னை நீ கூப்பிடாதத மனசுல வச்சிக்காம, நானே நேர்ல வந்திருக்கேன்... கட்டாயம் சர்ச்சுக்கும் தொடர்ந்து வீட்டுல நடக்கப் போற விருந்துக்கும் வந்திடுங்க...." என்று கூப்பிட்டு விட்டுப் போயிருக்கிறாள். அவசியம் போயே தீர வேண்டும்.

எல்லாம் சரியாக இருந்தால் ஆபீஸுக்கு அரை நாள் லீவு எடுத்துக் கொண்டு, வீட்டுக்கு வந்து, நிதானமாய் அலங்கரித்து, மாதவனுடன் சேர்ந்து சர்ச்சுக்குப் போயிருக்கலாம். இதுதான் போன வாரம் அவர்கள் போட்ட திட்டம். ஆனால், மாதவனுக்குத்தான் நாலு நாளாகக் காய்ச்சலான காய்ச்சல் வருத்தி எடுக்கிறதே!

நூற்றி இரண்டு, மூன்று என்று தணல் கட்டியை எடுத்து வாய்க்குள் அடக்கிக் கொண்ட மாதிரி, எப்போது தர்மாமீட்டரை நாக்கடியில் வைத்தாலும் சரசரவென்று பாதரசம் இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடிக்குத் தாவி விடுகிறது! முதல் இரண்டு நாட்கள் என்னடா இது, டைஃபாயிட் கிய்ஃபாயிடா இருந்து விடுமோ என்று பயமாகக் கூட இருந்தது. ஆனால் கர்த்தரின் கருணையால் இன்று காலை நூறுக்கும் குறைவாக டெம்பரேச்சர் இருக்கிறது ஆறுதலான சமாசாரம்.

"ஏற்கெனவே, எனக்காக நீ ரெண்டு நாள் லீவு எடுத்தாச்சு... இன்னிக்கும் வேணாம் வக... போயிட்டு, அப்படியே உன் ப்ரெண்ட் கல்யாணத்துலேயும் தலையக் காட்டிட்டு வந்திடு. வீட்டுக்கு வந்திட்டு இங்கேயிருந்து போறதுன்னா, அது வேற அலையணும்... சாந்தோம் சர்ச் உன் ஆபீஸ்லேர்ந்து பக்கம்தானே?" என்று காலையில் கணவன் கூறிய வார்த்தைகளில் நியாயம் இருப்பதை உணர்ந்து மறு பேச்சில்லாமல், பட்டுப் புடைவை ஒன்றை எடுத்துப் பையில் வைத்துக் கொண்டு கிளம்பி வந்திருக்கிறாள்.

நாலு மணி அளவில் ஆபீஸ் டாய்லெட்டிலேயே

முகம் கழுவி, உடை மாற்றித் தயாராகிக் கிளம்பினால், ஐந்து மணிக்குள் சர்ச்சில் இருக்கலாம்... மெய்விவாகச் சடங்குகள் நடந்து முடிக்க ஒரு மணி நேரம் என்று வைத்துக் கொண்டாலும், ஏழுக்குள் வீட்டுக்குப் போய் விடலாம்.

"இருட்ல பஸ்ஸுக்காகக் காத்துகிட்டு நின்னு அவஸ்தைப் படாதே வசு. ஆட்டோ ஒண்ணைப் பிடிச்சுக்கிட்டு வசதியா வந்திடு. என்ன?''

புறப்படும் நிமிஷத்தில் பரிவுடன் மாதவன் கூறின வார்த்தைகள் நினைவுக்கு வர, வசந்தாவின் உதடுகளில் சின்னதாய் முறுவல் ஒன்று உட்பக்கத்திலிருந்து கீறியது.

என்ன இருந்தாலும் மாதவன் காட்டும் அன்பு, அக்கறையின் பரிமாணமே அலாதிதான்...

பிள்ளை வேண்டாம், கர்ப்பத்தைக் கலைத்து விடு என்று பிடிவாதமாக முரண்டி, இவள் அதைவிட உறுதியாக நின்று மறுத்தபோது மாதவனுக்குக் கழுத்து வரை கோபம்தான். கிட்டத்தட்ட ஒரு மாதம் போலச் சேர்ந்தாற் போல் இரண்டு வார்த்தை பேசாமல் அழுக்கமாக இருந்து தன் எதிர்ப்பைத் தெரிவித்தவன்தான். ஆனால், நாட்கள் போகப் போகத் துளித்துளியாக அந்த மனஸ்தாபம் குறைந்ததுதானே கடைசியில் நடந்தது?

அவ்வப்போது இவள் உடம்புக்கு முடியாமல் தலைசுற்றல், வாந்தியுடன் மயக்கமாய்ப் படுத்தாலோ, அல்லது 'அசதியா இருக்கு மாது' என்று முனகி அசந்து உட்கார்ந்தாலோ மட்டும் சலிப்பட்டாசாய்ச் சர்ரென்று 'இதுக்குத்தான் சொன்னேன் இது வேணாம்னு' என்று கத்துவது உண்மைதான். என்றாலும் இவளிடம் காட்டும் அன்பில் எந்த மாற்றமும் இல்லை என்பதை ஒப்புக் கொண்டே ஆகவேண்டும்.

அதுவும்...





''மளிகைக் கடைக்காரர் கொடுத்த காலண்டரா இது?''

''ஆமாம். எப்படி கண்டுபிடிச்சே?''

'''முதல் தேதியில் மளிகைச் சாமான் வாங்கு முன் பழைய பாக்கியைக் கொடுத்துக் கடனைத் தீர்த்து விடு' என்று அச்சிட்டிருக்கே!''

— வனிதா செல்லப்பா.

---

வசந்தா ஒரு தரம் தலையை அசைத்துத் தன்னைத்தானே உலுக்கிக் கொண்டாள்.

எதற்கு? பழங்கதை எல்லாம் எதற்கு?

இப்போது உறவு சுமுகமாக உள்ளது. கோபதாபம் குறைந்துள்ளது என்பதுதானே முக்கியம்... அதைவிட்டு விட்டு வேண்டாத பழங்கதை ஆராய்ச்சி எதற்கு?

திட்டமிட்டபடி நாலரை மணி குமாருக்குத் தயாராகி அக்கௌண்டண்டிடம் சொல்லிவிட்டுக் கிளம்பினவள், சர்ச்சை அடைந்து அங்கு குழுமியிருந்த நண்பர்களோடு சேர்ந்து கொண்டாள்.

பல பரிச்சயமான முகங்கள்.

''அட, வசந்தா மேரியா? எப்படி இருக்கே? உண்டாயிருக்கியா? எத்தனும் மாசம்? போவுது... அண்ணனையும் கோவிலையும் எதுத்துக்கிட்டாலும் சுகமா, மகிழ்ச்சியா இருந்தாச் சரி...'' என்றார்கள் சிலர்.

'நம் மதத்தில் கிடைக்காத மாப்பிள்ளைகளா?' அத்தனையும் விட்டுவிட்டு வேற்று மதத்தைச் சார்ந்தவனோடு ஓடிப்போனவளோடு எங்களுக்கு என்ன பேச்சு?' என்று அலட்சியமாய் முகத்தைச் சிலர் திருப்பிக் கொள்ள —

சட்டென்று யார் கண்ணிலும் விழாத இடமாகத் தேர்ந்தெடுத்து நின்று கொண்டாள் வசந்தா.

ரோஸலின் குடும்பத்தாரை அண்ணனுக்கு நன்றாகவே தெரியும்... ஒருவேளை வந்து விடுவாரோ?

பயமாக இருந்தது... நேருக்கு நேர் அண்ணனையோ, அண்ணியையோ பார்த்து விட்டால் என்ன செய்வது என்கிற படபடப்பு எழுந்தது...

தனியாக வந்தது அசட்டுத்தனமோ?

போய் விடலாமா?

யோசித்துக் கொண்டிருக்கையிலேயே வருகைச் சடங்கு துவங்கி விட, வசந்தா படபடப்பைக் குறைத்துக் கொண்டு வலுக்கட்டாயமாகக் கவனத்தை வாசலுக்குத் திருப்பினாள்.

சாமியார் பூசைக்குரிய திருஉடைகள் அணிந்து, பணியாளரோடு ஆலய வாசலில் நின்று மணமக்களை வரவேற்று வரவேற்புரை வழங்கினார்.

''அன்பு மிக்க மணமக்களே, திருமணத் திருவருட் சாதனத்தை முறையே நிறைவேற்றி, இறைவனின் அருள் பெற அவரது திருச்சன்னிதியை நாடி வந்திருக்கிறீர்கள். உங்களோடு இன்று திருச்சபையும் மகிழ்கிறது. 'பரமனின் திருமுன் பக்தியுடன் வருக!' என உங்களை அன்புடன் அழைக்கிறேன்.''

வரவேற்பு முடிந்ததும் பணியாளர் முன்னே செல்ல, குரு, மணமக்கள், பெற்றோர், சாட்சிகள் என்று ஒருவர் பின் ஒருவராக அனைவரும் பீடத்தை நோக்கிச் சென்ற போது வருகைப் பாடல் பாடப்பட்டது.

''ஆண்டவர் தம் திருத்தலத்தினின்று
உங்களுக்குத் துணை செய்வாராக;
சீயோனிலிருந்து உங்களை ஆசீர்வதிப்பாராக
உங்கள் இதயம் விரும்புவதை
அவர் உங்களுக்கு அருள்வாராக.
உங்கள் கருத்தையெல்லாம்
நிறைவேற்றுவாராக!''

சேர்ந்த குரலில் வருகைப்பாடல் பாடின பிறகு திருப்பலி நடந்தது.

மறையுரை முடிந்தபின் சாமியார் மணமக்களின் அருகில் வந்து நின்று கொள்ள திருமணச் சடங்குகள் ஆரம்பமாயின.

மணமக்கள், விருந்தினர்கள் உட்பட, வந்திருப்பவர் அனைவரும் எழுந்து நின்று கொள்ள குரு கணீரென்ற குரலில், ''அன்பு மிக்க புனிதம் ரோஸலின், பாண்டியன் செபாஸ்டியன், திருச்சபையின் திருப்பணியாளர் முன்பாகவும், இத்திருக் கூட்டத்தின் முன்னிலையிலும் உங்கள் அன்பை நம் ஆண்டவர் முத்திரையிட்டுக் காத்தருளுமாறு இங்கு வந்திருக்கின்றீர்கள். உங்கள் அன்பைக் கிறிஸ்து நிறைவாக ஆசீர்வதிக்கின்றார். ஏற்கெனவே அவர் உங்களைப் புனித ஞானஸ்நானத்தால் அர்ச்சித்துள்ளார். இப்போதோ, மற்றொரு திருவருட்சாதனத்தின் வழியாக உங்களுக்கு அருள்வளம் ஈந்து, நீங்கள் ஒருவருக்கொருவர் என்றும் பிரமாணிக்கமாய் இருக்கவும், திருமணத்தின் ஏனைய கடமைகளை ஏற்று நிறைவேற்றவும் உங்களுக்கு ஆற்றல் அளிக்கின்றார். எனவே, உங்கள் கருத்தை அறிந்து கொள்ளத் திருச்சபையின் முன்னிலையில் உங்களை வினவுகிறேன். புனிதம் ரோஸலின், பாண்டியன் செபாஸ்டியன் — நீங்கள் இருவரும் முழு மனச் சுதந்திரத்துடன் திருமணம் செய்து கொள்ள, எவ்வித வற்புறுத்தலுமின்றி இங்கு வந்திருக்கின்றீர்களா?'' என்று வினவ, மணமக்கள் ஒருமிதமாய், ''வந்திருக்கின்றோம்'' என, குரு, ''நீங்கள் மணவாழ்க்கை நெறியைப் பின்பற்றி வாழ்நாளெல்லாம் ஒருவரையொருவர் நேசிக்கவும், மதிக்கவும் தயாராயிருக்கின்றீர்களா?'' என்று வினவ, மணமக்கள் ''தயாராயிருக்கிறோம்'' என, மீண்டும் குரு ''இறைவன் உங்களுக்கு அரு

## சர்ககரை பற்றிய பயத்தை விட்டொழியுங்கள்
## சர்க்கரையின் முழுச்சுவையை அனுபவியுங்கள்!

# இப்போது

# ஸ்வீட்'அன்லோ

சர்க்கரைக்கு
பதிலாக




நான்கே
கலோரிகள்
கொண்டது.
கசப்பற்றது.

SWEET'N LOW

ஆரோக்கியத்தில் அக்கறை
உள்ளவர்களுக்கு தேவை—
''ஸ்வீட் அன்லோ'' சர்ககரை நோய்
உள்ளவர்களுக்கு அவசியம்
தேவை—''ஸ்வீட் அன் லோ''
உடல் பருமனை குறைப்பதற்கும்
''ஸ்வீட் அன் லோ''



SWEET'N LOW

காபி டீ மற்றும்
அனைத்து பானங்
களிலும் சர்க்கரைக்கு பதிலாக
உபயோகிக்கலாம்.
28 மேலை நாடுகளில்
30 ஆண்டுகளாக பிரசித்தி
பெற்ற ''ஸ்வீட் அன் லோ''
இப்போது தமிழகத்தில்
முக்கிய கடைகளில்
கிடைக்கிறது.



SWEET'N LOW

ஒரு பாக்கெட் ''ஸ்வீட்
அன் லோ''=இரண்டு ஸ்பூன்
சர்க்கரைக்கு சமம்.



இந்தியாவில் தயாரிப்போர்.
**இபிஸ் ஹெல்த் எய்ட்ஸ்**
**லிமிடெட்**, தும்கூர், கர்நாடகம்.

மொத்த விற்பனையாளர் (தமிழ்நாடு)
**யோக்ராஜ் எண்டர்பிரைசஸ்,**
870, டாக்டர் இராமசாமி சாலை, கே.கே. நகர்,
சென்னை-600 078. தொலைபேசி: 427738



''உங்க சொல்லுக்கு மதிப்புக் கொடுத்து உங்க பெண்ணைக் காதலிப் பதை நிறுத்திடறேன்! ஆனால் ஒரு கண் டிஷன்!''

''என்ன அது?''

''உங்க பெண் கூடச் சுத்தின வகையில, எனக்கு 7,358 ரூபாய் செலவாகி யிருக்கு; அதைக் கொடுத்துடுங்க!''

— மணியன் தர்மலிங்கம்.

ளும் மக்களை நீங்களும் அன்புடன் ஏற்று கிறிஸ்துவின் போதனைக்கும் திருச்சபையின் சட்டத்திற்கும் ஏற்றபடி வளர்ப்பீர்களா?'' என, மணமக்கள் தயங்காமல் "வளர்ப்போம்" என்று கூறி முடித்ததும் சாமியார் மெய் விவாகத்தின் அடுத்த சடங்கைத் துவக்கி னார்.

மணப்பெண், மணமகன் இருவரையும் கைகோத்துப் பிடிக்க வைத்து, அவர்களின் மன ஒப்புதலைப் பகிங்கரமாக அறிவிக்க வைத்து, குழுமியிருந்த விருந்தினர் 'ஆமென்' என்று கூறியதும், சாமியார் இணைந்த கை களின்மீது புனித நீரைத் தெளித்து ஆசீர் வதித்தார்.

இதைத் தொடர்ந்து சாமியார் மாங்கல் யத்தை ஆசீர்வதித்து, அதன்மேல் புனித நீர் தெளித்து, மணமகன் கையில் கொடுக்க, 'மணமகன் ''புனிதம் ரோஸலின், என் அன் புக்கும் பிரமாணிக்கத்திற்கும் அடையாள மாக இந்தத் திருமாங்கல்யத்தைப் பிதா, சுதன், பரிசுத்த ஆவியின் பெயராலே அணிந்து கொள்'' என்கிற வாசகங்களோடு அதை அணிவிக்க, ''என் அன்புக்கும், பிர மாணிக்கத்திற்கும் அடையாளமாக இந்தத் திருமாங்கல்யத்தைப் பிதா, சுதன், பரிசுத்த ஆவியின் பெயராலே அணிந்து கொள்கி றேன்'' என்று மணமகள் பணிவுடன் கூறி அதை ஏற்க, மங்கலச் செதியை பறைசாற்ற கோவில் மணி விடாமல் அடிக்கப்பட்டது.

மோதிரம், மாலைகளைச் சாமியார் ஆசீர் வதித்து மணமக்களிடம் கொடுத்து அணி யச் சொன்ன நிமிஷத்தில் தோள் மீது யாரோ கை வைக்கிற உணர்வில் திரும்பினான்.

உதடு துடிக்க, கண்கள் கலங்க, மெலிந்து வாடின... பரிமளம்!

''அத்தம்மா...''

சூழ்நிலையை மறந்து எதிரில் நின்றவளைத் தாவி அணைத்தபோது குரல் கேவலாக வெளிப்பட்டது. காருண்ணத்தைக் கண்ட பரித விப்போடு ஒருவரை ஒருவர் ஆரத்தழுவிய நிமிஷத்தில் இருவர் கண்களிலுமே மூளைத்த நீர் கன்னத்தில் கோடு போட்டுக் கொண்டு இறங்கியது.

''எப்படி இருக்கே வசு?''

''நல்லா இருக்கேன் அத்தம்மா... நீங்க?''

பரிமளம் நீளமாகப் பெருமூச்சு விட் டார்.

''என்ன அத்தம்மா?''

''சொல்றேன். ஒரு குரல் உன்னைக் கட் டிக்கிட்டு அழுதிட்டுப் போகத்தானே தாஸ் கோச்சுக்கிட்டாலும் பரவாயில்லேன்னு 'ஆஸ் பத்திரில இருக்கற எலிசபெத்தப் பாத்திட்டு வரேன்'னு பொய் சொல்லிட்டு வந்திருக் கேன்.''

இதற்குள் மெய்விவாகத்தின் அடுத்த நிகழ்ச்சியாக விசுவாசிகளின் மன்றாட்டுத் தொடங்கி விட, அதில் பங்கெடுக்க முடியா மல் இவர்களின் பேச்சு தொணதொணப் பாக இருப்பதை வெளிப்படுத்தும் வகையில் 'ப்ச்' 'ச்சு' என்று குரல்கள் எழும்பக் கொஞ் சம் அடங்கினார்கள்.

பீடத்தில் சாமியார் மன்றாட்டை, ''இப் புதிய மணமகனும், மணமகளும் தங்கள் இல்லத்தில் சமாதானத்தோடும், மகிழ்ச்சி யோடும் வாழ வேண்டும் என ஆண்டவரை மன்றாடுவோம்'' என்று துவக்கி வைக்க, கூடியிருந்த விருந்தினர்கள், ''ஆண்டவரே எங்கள் மன்றாட்டைக் கேட்டருளும்'' என்று கோரஸாக வேண்டுகோள் விடுக்க, இதே ரீதியில் மன்றாட்டு தொடர்ந்தது.

சில நிமிஷங்களுக்கு எதுவும் பேசாமல் மௌனித்து, பின்னர் அப்படி இருப்பது மிகுந்த சிரமத்தைத் தர சடங்குகளில் பங் கெடுத்தவரை போதும் என்று தீர்மானித்து பரிமளம், வசந்தாவின் கையைப் பற்றி வெளியில் வந்தார்.

சந்தடியில்லாமல் ஒதுக்குப்புறமாய்ச் சென்று வசந்தாவை இறுகக் கட்டிப் பிடித்துக் கொண்டு, ''பெத்த பாசத்த விட வளர்த்த பாசத்துக்கு வலு அதிகம்னு சொல்வாங்க... இப்ப நான் முழுமையாக அனுபவிக்கிறேன்... உன் மேல அன்பு வச்சிட்டதைக் கொண்டு, நெதைக்கும் உங்க அண்ணன் வாயில விழுந்து எழுந்துக்கறேன். ஆறுதலா ரெண்டு வார்த்தை சொல்லக்கூட அந்த வீட்டுல யாருக்கும் மனசில்ல... போக்கிடம் இல் லாம நாய் படற பாடு படறேன். கர்த்தர் கருணை காட்டி என்னைச் சீக்கிரமா கூப்பிட் டுக்கிட்டார்னுத்தான் விமோசனம்... ஏசுவே... ஏசுவே...'' என்று வாய் மூடாமல் அரற்ற —

அரை மணிக்குப் பிறகு ஒரு தினுசாய் அத்தையைச் சமாதானம் பண்ணி அனுப்பி விட்டு, தானும் சுதாரித்துக் கொண்டு புறப் பட்டபோது வசந்தாவினுள் 'இப்படிச் செய் தால் என்ன?' என்கிற கேள்வி விஸ்வரூபம் எடுத்து ஆட்டம் போடத் தலைப்பட்டது.

(தொடரும்)

# அம்மா பிள்ளை

"சகு... சகுந்தலா!... நிஜமாவே நீ தானு! நான் கனவு காணலியே. கடவுளே உனக்கு நன்றி..." என்று மருத்துவமனைப் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்து, கொஞ்சம் சப்தமாகவே பேசிய சீனிவாசனைச் சகுந்தலா விநோதமாகப் பார்த்தாள்.

ஆள் மெலிந்து... தாடி வளர்ந்து அடையாளம் தெரியாமல் மாறி, இருந்தாலும் அவனது பெரிய கண்கள் மட்டும் மாருமல்....

சகுந்தலா பழக் கூடையை அவன் படுக்கையில் வைத்துவிட்டு நின்று கொண்டிருந்தாள்.

அவன் நகர்ந்து, அவள் உட்கார இடம் கொடுத்தான்.

"எப்படி இருக்கே சீனிவாஸ்?" என்ருள்.

"அர்த்தம் கெட்ட கேள்வி சகு! படுக்கையில இருக்கேன். பிழைத்தது அதிசயம்!" என்ருன் சிரிப்புடன்.

"அம்மா எங்கே? உன் மிஸஸுக்கு இந்த விஷயம் தெரியுமா?"

"எனக்குத் தெரியாது சகு...."

"அப்படியே இருக்கியே அம்மா பிள்ளையா.... உங்களோட பிரிவுக்கு என்ன காரணம்?"

"அவங்க சொன்ன மாதிரி நகை போடலை. அம்மா அவ அப்பாகிட்டே நகையோட பொண்ணை அனுப்பினுப் போதும்னு சொல்லி அனுப்பிட்டாங்க....."

"நீ மறுத்துப் பேசலியா சீனு?"

"என்ன பேச முடியும்? பொண்டாட்டிக்குப் பரிஞ்சு பேசி அம்மாவைத் தவிக்க விட்டவன்ங்கற பேர் வந்துடுமே! அம்மா சின்ன வயசில இருந்தே கஷ்டப்பட்டவ. ஏமாற்றத்தாலயே வளர்ந்தவ. தன் பையன் கல்யாண விஷயத்திலேயும் ஏமாற்றப்பட்





எனக்குச்
சம்மதமே —
நீ
மாலையாக
இருந்தால்
மலராக
இருக்க
மட்டுமல்ல;
நீ
பாலையாக
இருந்தால்
மணலாக
இருக்கவும்!



நா. நாகராஜன்



இவன்: நேத்து ஆபீஸ்லே ரொம்ப முக்கிய மான ஒரு ஃபைலைத் தலைக்கு வெச்சுக் கிட்டு நான் தூங்கிக்கிட்டிருந்தப்ப திடீர்னு எங்க மானேஜர் உள்ளே நுழைஞ்சிட்டார்.

அவன்: அடடா... ரொம்பக் கடுமையா ஏதாவது பேசிட்டாரா?

இவன்: அதெல்லாம் ஒண்ணுமில்லே... 'தூங்கும் போதுகூட எவ்வளவு பத்தி ரமா, பொறுப்பா அந்த ஃபைலைப் பாதுகாக்கிறார் பாருங்க'ன்னு மத்த வங்ககிட்டே என்னைப் பத்திப் புகழ்ந்து பேசினாராம்!

— இரா. சம்பத்குமார்.

---

டதை அவளால தாங்க முடியலே...''

''இதுசரிங்கறயாசீனு? கேவல மாஇல்லே... மனசை நோகடிக்கற காரியம் இல்லே? அவ நகையோ... வந்தாலும் உன் மேல அவ ளுக்கு என்ன மதிப்பு இருக்கும்?''

''வாக்குச் சுத்தம் வேணும், இல்லையா சகுந்தலா....?''

''என்ன சொன்னே சீனு?''

''வாக்கைக் காப்பாத்தறது... இல்லேன்னு வயசுக்கோ வாழறதுக்கோ அர்த்தமே இல்லியே...''

''நிஜமாவா சீனு?''

''கண்டிப்பா... அதான் நான் பேசாம இருந்துட்டேன்.''

''அதை வேற விதமாச் செய்திருக்க லாமே சீனு. பெண்ணே அனுப்பாம, விஷ யம் ரெண்டாம் பேருக்குத் தெரியாம, அவ அப்பாகிட்டே கறாராப் பேசி இருக்கலாமே...''

''அப்போ, இந்த அவசரம் அவருக்குப் புரியாது சகு! கண்டுக்காம இருந்துடுவார். நாளாக நாளாகச் சரியாகப் போயிடும்னு இருந்துடுவார்....''

''இதை நீயா சொல்ற சீனு?''

''இல்லே, அம்மா சொன்னது...''

ஒரு நர்ஸ் வந்து சீனுவின் டெம்பரேச்சர் பார்த்து விட்டு, ஓர் ஊசி போட்டு விட்டுப் போனாள். பேச்சு தடைப்பட்டது.

சகுந்தலா சீனுவைப் பற்றி— அவனின் இத்தனை நேரப் பேச்சையும் அசை போட் டுக் கொண்டிருந்தாள்.

அவனிடம் நிறையவே மாறுதல்கள்!

ஒரே தெருவில் எதிர் எதிர் வீடுகளில் குடி இருந்தாலும் ஒரே குடும்பம் மாதிரி பழகிய பழக்கம், இன்று சகுந்தலாவை இத்தனை தூரம் இழுத்து வந்திருக்கிறது.

சகுந்தலா சீனிவாசனைவிட ஆறு மாதம் பெரியவள்.

இருந்தாலும் அவர்களின் பேச்சில், பழக் கத்தில் எந்த பாதிப்பும் இல்லை.

சீனியின் அம்மா விளையாட்டாகச் சொல்லுவாள்.

''எங்க சீனு மட்டும் பெரியவனா இருந்தா, நீங்க சகுந்தலாவுக்கு வெளில மாப்பிள்ளே தேடவே வேண்டாம்...''

சீனு பதிலற்றுச் சிரித்துக் கொண்டிருப் பான்.

காலையில் ஊருக்கு வந்ததும் சகுந்தலா வின் அம்மாதான் அத்தனையும் சொன்னாள்.

சீனு மனைவியை அனுப்பி வைத்தது... ஆஸ்பத்திரியில் கிடப்பது.... எல்லாவற்றை யும்.

அந்தப் பெண் இந்நேரம் இவன் இங்கே இப்படி இருப்பது தெரியாமல், என்ன செய்து கொண்டிருக்கும்...

இது என்ன வாழ வேண்டிய வயதில் இப்படி ஒரு கண்ணாமூச்சி விளையாட்டு!

சீனுவைப் பற்றிய ஒரு சம்பவம் சகுந்த லாவால் மறக்க முடியாதது.

சகுந்தலாவின் பெரியப்பா பெண் கல் யாணத்திற்கு அவளைத் தவிர அத்தனை பேரும் போயிருந்தனர்.

பரீட்சை காரணமாக அவள் போக வில்லை. இரவுத் துணைக்குச் சீனுவும் அவன் அம்மாவும்.

சகு ஒரு கவிதைத் தொகுப்பு படித்துக் கொண்டிருக்கும் போது சீனு வந்தான்.

'எனக்குச் சம்மதமே—
நீ மாலையாக இருந்தால்
மலராக இருக்க மட்டுமல்ல;
நீ பாலையாக இருந்தால்
மணலாக இருக்கவும்!'

சீனுவிடம் அந்தக் கவிதையைக் காண் பித்தாள்.

படித்து முடித்ததும் சகுவின் கையைப் பிடித்து, ''ஐ லவ் யு சகு! நீ இல்லாமல் என்னால வாழ முடியாது சகு! சதா உன் னையே நினைச்சுக்கிட்டு இருக்கேன்! நீதான் என் உயிர் சகு....'' என்றான்.

அந்த நேரத்தில் ''சீனு'' என்று கூப்பிட் டுக் கொண்டு அவன் அம்மா நுழைந்தாள்.

பிடி விலகியது.

அவள் அதற்குப் பதில் சொல்லவில்லை.

பிறகு பதில் சொல்ல வேண்டிய சந்தர்ப் பமும் வரவில்லை.

ஒரு நாலைந்து நாள் எதுவும் பேசாமல் வளைய வந்தான்.

## வாசகர் பங்கு

# தளபதி திடமதி



**பரிசு ரூ 400**

முதல் துணுக்குக்குப் பரிசு ரூ. 25. ஒருவரே எழுதிய துணுக்குகள் சில, அடுத்த பல இதழ்களில் பிரசுரமானால் ஒவ்வொரு முறையும் பரிசு இரட்டிப் பாகி, அதிகபட்சமாக ஒரு துணுக்கு ரூ. 400 பெற வாய்ப்புண்டு! சமுதாய, அரசியல் பிரச்னைகள் அல்லது நிகழ்ச்சிகளைப் பற்றி நமது ஆஸ்தான ஜோக்கர் தளபதி திடமதி என்ன கருத்தைக் கூறுவார் என்பதைத்தான் நீங்கள் கீழே கூப்பனில் எழுதி அனுப்ப வேண்டும். பொதுக் கூட்டத்தில் பேசுவது போலவோ, அல்லது அமைச்சர், அதிகாரி, அல்லது சக தொண்டரிடம் உரையாடுவது போலவோ அமைந்திருக்கலாம். உறை மீது "தளபதி திடமதி" என்று குறிப்பிடவும்.

கூப்பன்:

கல்கி 3.1.88 இதழ் — முடிவு தேதி: 12.1.88.

தளபதி திடமதி:"..................................................

..................................................

..................................................

..................................................

..................................................

..................................................

..................................................

..................................................

..................................................

..................................................

..................................................

..................................................

என் பெயர்:..................................................

விலாசம்:..................................................

..................................................

ஊரிலிருந்து சகுந்தலாவின் பெற்றோர்கள் வந்ததும் சகஜமாகிப் போனான்.

கல்யாணத்திற்குப் போன இடத்தில் சகுவிற்கு ஒரு ஜாதகம் வந்திருப்பதாய் அவள் அம்மா சொன்ன போது, "உண்மையிலேயே ரொம்பச் சந்தோஷம் மாமி" என்றான்.

அதைச் சகுந்தலாவும் கேட்டுக் கொண்டிருந்தாள்!

இப்போது அவன் வாக்குச் சுத்தம் பற்றி பேசியதும் இதையெல்லாம் சொல்ல வேண்டும் என்று நினைத்தாள் விளையாட்டுக்கு!

வேண்டாம் இவனைக் காயப்படுத்தாமலே பிரச்னையைத் தீர்த்துவிட வேண்டும். என்று நினைத்துக் கொண்டாள்.

"என்ன யோசனை சகு?"

"இல்லே சீனு. இப்போ உனக்கும் அவளுக்கும் என்ன உறவுன்னு நினைச்சுப் பார்த்தேன்."

"ஏன், அவ என் மனைவி...."

"அப்போ ஏன் நீங்க ஒண்ணா இல்லே?"

"அது வந்து..."

"ப்ளீஸ்... நான் சொல்றதைக் கேளு சீனு. உங்க அம்மாகிட்டே உண்மையிலேயே நீ அவளைப் பார்க்கப் பிரியப்படறதாவும் இனிமே அவ இல்லாம இருக்க முடியாதுன்னும்... உனக்குச் சாவைப் பற்றிய பயம் இருக்கறதாவும் கதை விடு. நீங்க ரெண்டு பேரும் சேர்றதுக்கு ஒரு பொய் சொன்னாத் தப்பில்லே. அவளுக்குக் கடிதம் எழுதி வரச் சொல்லு....

அவன் அவள் பேசுவதையே கேட்டுக் கொண்டிருந்தான்.

"எனக்கும் அப்படி செய்யணும்னு ஆசைதான் சகு! இருந்தாலும் அம்மாவை நானும் ஏமாத்தறேங்கறதை நினைச்சாப் பாவமா இருக்கு. அம்மாவுக்கு என்னை விட்டா யாரு இருக்கா, சொல்லு..." என்றான்.

அந்த நேரத்தில் அவன் மேல் அதிக அளவு ஆத்திரம் வந்தது சகுந்தலாவுக்கு.

'உனக்கெல்லாம் எதுக்கடா கல்யாணம்?' என்று சட்டையைப் பிடித்து உலுக்க வேண்டும் போல் வெறி எழுந்தது.

'அம்மாவின் பேச்சை
மட்டும் கேட்பதாயிருந்தால்
நீ கட்டிலுக்கு வந்திருக்க
வேண்டியதில்லை.
தொட்டிலிலேயே
இருந்திருக்கலாம்.'

— என்ற கவிதை வரிகள் ஞாபகம் வந்தன.

"இது ஏமாத்தறது இல்லே சீனு. உண்மை... சப்போஸ் உனக்கு ஏதாவது ஆயிடுச்சுன்னா அந்தப் பொண்ணுக்குக் கடைசி நேரத்துல கூட உன் பக்கத்துல இருக்க முடியாம போயிடுத்தேங்கற வருத்தம் ஆயுசு பூரா இருக்கும் இல்லையா....

சகுந்தலா இதைச் சொல்லி முடித்த பிறகு, ரொம்ப நேரம் சீனு பேச்சற்று உட்கார்ந்திருந்தான்.

அவன் தீவிரமாக யோசிப்பது தெரிந்தது.




## அத்தியாயம் 39
## "இதோ யுத்தம்!"

வந்தியத் தேவன், "உறையிலிருந்து கத்தியை எடுங்கள்!" என்று சொன்ன உடனே, இளவரசர் "இதோ எடுத்து விட்டேன்!" என்று பட்டாக் கத்தியை உருவி எடுத்தார். அதே சமயத்தில் வந்தியத்தேவனும் உறையிலிருந்து கத்தியை எடுத்தான். அவை பிரம்மாண்டமான ராட்சதக் கத்திகள். அனுராதபுரத்துப் போதி விருட்சத்தின் அருகில் குதிரைகளுடன் வந்து நின்றவர்கள் அந்தக் கத்திகளையும் கொடுத்து விட்டுச் சென்றார்கள்.

இளவரசர் குதிரையிலிருந்து கீழே குதித்து "வா இறங்கி! உன்னுடைய அதிகப் பிரசங்கத்தை என்னால் பொறுத்துக்கொண்டிருக்க முடியாது! இங்கேயே ஒருகை பார்த்துவிட்டுத்தான் போக வேண்டும்!" என்று கடுமையாகக் கூறியதும், வந்தியத்தேவன் திகைத்துப் போனான். இது விளையாட்டா, வினையா என்று அவனுக்குத் தெரியவில்லை. எனினும், இளவரசர் குதிரையிலிருந்து பூமியில் இறங்கி விட்டபடியால் அவனும் இறங்க வேண்டியதாயிற்று.

"என்ன ஐயா! ஏன் தயங்குகிறீர்? நேற்றிரவு என்னை நீர் அவமானப் படுத்தப் பார்த்தீர் அல்லவா? உம்முடைய பாட்டன் வீட்டு அரண்மனை முற்றத்தில் என் பாட்டன்மார்கள் வந்து காத்திருந்தார்கள் என்று சொல்லவில்லையா? அவர்களுடைய குடை, சிவிகை ஆகியவற்றைப் புலவர்கள் தட்டிக்கொண்டு போவதைப் பார்த்துப் பொருமினார்கள் என்று கூறவில்லையா? அதை நினைத்துப் பார்க்கப் பார்க்க எனக்குப் பொறுக்க முடியவில்லை. இரண்டில் ஒன்று தீர்த்துக் கட்டிவிட்டுத்தான் இங்கிருந்து புறப்பட வேண்டும்!" என்று சொல்லிக் கொண்டு இளவரசர் இரண்டு கைகளினாலும் தமது பட்டாக்கத்தியின் அடியைப் பிடித்துச் சுழற்றிக் கொண்டே வந்தியத்தேவனிடம் அணுகினார்.

ஆம்; அது சாதாரண கத்தி அன்று என்பதாகச் சொன்னோமே? எவ்வளவு பலசாலியானாலும் அதை ஒரு கையினால் தூக்கி நிறுத்துவதே பெரிய காரியம். இரண்டு கைகளினாலும் பிடித்துக் கொண்டால்தான் கத்தியைச் சுழற்றவும் எதிரியைத் தாக்கவும் முடியும்.



இளவரசர், அவ்விதம் இரு கைகளிலும் கத்தியைச் சுழற்றிய போது அவரைப் பார்த்தால் அரண்மனையில் சுக போகங்களில் வளர்ந்த கோமள சுபாவம் படைத்த இராஜ குமாரனாகத் தோன்றவில்லை. பழைய காலத்து வீராதி வீரர்களான பீமனையும் அர்ச்சுனனையும் அரவானையும், அபிமன்யுவையும் போல் விளங்கினார். இன்னும் திருமேனியில் தொண்ணூற்றாறு புண் சுமந்த விஜயாலய சோழரையும் யானை மேல் துஞ்சியவரான இராஜாதித்த தேவரையும் ஒத்து, அவர்களுடைய வழியில் வந்தவர் தாம் என்பதை ஞாபகப் படுத்துமாறு வீர கம்பீரத் தோற்றத்துடன் திகழ்ந்தார்.

வந்தியத்தேவனும் இரண்டு கைகளிலும் கத்தியைப் பிடித்துச் சுழற்றத் தொடங்கினான். ஆரம்பத்தில் அவனுடைய மனத்தில் குழப்பமும் தயக்கமும் குடிகொண்டிருந்தன. போகப் போக, மனம் திடப்பட்டது. வீர வெறி மிகுந்தது. எதிரி தன் போற்றுதலுக்கு உரிய இளவரசர் என்பது மறந்தது. எதற்காக இந்தச் சண்டை என்னும் எண்ணமும் மறைந்தது. எதிரியின் கையில் சுழலும் கத்தி ஒன்றே அவனது கண் முன் நின்றது. அக் கத்தியினால் தாக்கப்படாமல் தான் தப்புவது எப்படி, அதைத் தட்டி எறிந்துவிட்டு எதிரியைக் காயப்படுத்துவது எப்படி என்ற ஒரே விஷயத்தில் அவன் கவனமெல்லாம் பதிந்திருந்தது.

கத்திகள் சுழலும் வேகமும் அவை ஒன்றின் மேல் ஒன்று மோதி 'டணார்' 'டணார்' என்ற ஒலியை எழுப்பும் வேகமும் முதலில் சவுக்க காலத்தில் தொடங்கி, மத்தியம காலத்தைத் தாண்டி, துரித காலத்துக்கு வந்தன.

இளவரசருடைய காரியம் முதலில் ஆழ்வார்க்கடியானுக்கும் விளங்கவில்லை. ஆனாலும், அதில் ஏதோ ஒரு நோக்கம் இருக்க வேண்டும் என்று அவன் கருதினான். வருகிறவர்களைத் தடுத்து நிறுத்துவதற்கும், அவர்கள் இன்னார் என்று தெரிந்து கொண்டு அதற்கேற்ப நாம் செய்ய வேண்டியதை நிர்ணயிப்பதற்கும் அது ஓர் உபாயமாயிருக்கலாம். ஆகவே அந்த இரு வீரர்களுடைய குதிரைகளையும் சாலை மத்தியில் குறுக்கே நிற்கும்படி விட்டு அவற்றின் தலைக் கயிறுகளைப் பிடித்துக் கொண்டு ஆழ்வார்க்கடியான் காத்திருந்தான்.

சாலையில் எதிர்ப்புறமிருந்து வந்து கொண்டிருந்த குதிரை வீரர்கள் நெருங்கி வந்தார்கள். அவர்களுக்கு மத்தியில் புலிக்கொடி பறந்து கொண்டிருந்ததைப் பார்த்ததும் ஆழ்வார்க்கடியானுடைய கவலை நீங்கியது. வருகிறவர்கள் நம்மவர்கள்தான். ஆனால் யாராயிருக்கும்?

அவர்களில் முன்னால் வந்த கட்டியக்காரர்கள் அந்த விஷயத்தைப் பறையறைந்து அறிவித்தார்கள்.

''ஈழத்துப் போரில் மகிந்தனைப் புறங்கண்ட இலங்கைப் படைகளின் சேநாதிபதி— வைகையாற்றுப் போரில் வீர பாண்டியன் தலை கொண்ட கொடும்பாளூர்ப் பெரிய வேளார்— பூதி விக்கிரம கேசரி மகாராஜா விஜயமாகிறார்! பராக்!'' என்று ஒரு இடி முழக்கக் குரல் ஒலித்தது.

''பல்லவ குலத் தோன்றல் — வைகைப் போரில் வீர பாண்டியன் தலை கொண்ட வீராதி வீரர்—வடபெண்ணைப் போரில் வேங்கிப் படையை முறியடித்த பராக்கிரம பூபதி—பார்த்திபேந்திர வர்மர் விஜயமாகிறார்!—பராக்!'' என்று இன்னொரு இடி முழக்கக் குரல் ஒலித்தது.

இப்படிக் கட்டியம் கூறியவர்களுக்குப் பின்னால் சுமார் முப்பது குதிரை வீரர்கள் வந்தார்கள். அவர்களுள் நடுநாயகமாகக் கம்பீரமான வெள்ளைப் புரவிகளின் மீது சேநாதிபதி பெரிய வேளாளரும் பார்த்திபேந்திரனும் வீற்றிருந்தார்கள்.

குதிரை வீரர்களைத் தொடர்ந்து அம்பாரியுடன் ஒரு பெரிய யானை வந்தது.

இன்னும் சிறிது தூரத்துக்குப் பின்னால் வந்த காலாட்படை புழுதிப் படலத்தில் மங்கலடைந்து காணப்பட்டது.

முன்னால் வந்த குதிரை வீரர்கள் வழியில் ஏற்பட்ட தடையினால் அதிருப்தி அடைந்தவர்களாகத் தோன்றினார்கள்.

"யார் அது?" "விலகு!" "வழி விடு!" என்ற சில குரல்களும் கேட்டன.

பின்னர் அக்கூட்டத்தில் 'கசமுச கசமுச' என்ற இரகசியப் பேச்சு வார்த்தைகளும் "ஓஹோ!" "ஆஹா!" என்ற வியப்பொலிகளும் எழுந்தன.

வீரர்கள் குதிரைகள் மீதிருந்து குதித்தார்கள். கத்திச் சண்டை போட்டவர்களைச் சூழ்ந்து கொண்டு நின்றார்கள்,

பூதி விக்கிரம கேசரியும் பார்த்திபேந்திரனுங்கூடக் குதிரை மீதிருந்து பூமியில் இறங்கி விட்டார்கள். வீரர்களின் முன்னணியில் வந்து நின்றார்கள்.

பார்த்திபேந்திரன் பட படத்தான். விக்கிரம கேசரியிடம் "பார்த்தீர்களா? வல்லத்தானைப் பற்றி நான் சொன்னது உண்மையா, இல்லையா? சுத்த அதிகப்பிரசங்கி! இளவரசரிடமே தன் கைவரிசையைக் காட்டத் தொடங்கி விட்டான். இதை நாம் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பதா?...." என்று தன் கையிலிருந்த கத்தியை ஓங்கினான்.

பூதி விக்கிரம கேசரி அவனுடைய கையைப் பிடித்துத் தடுத்தார்.

"கொஞ்சம் பொறுங்கள், பார்க்கலாம்! என்ன அற்புதமான கத்திப் போர்! இந்த மாதிரி பார்த்து எத்தனையோ நாள் ஆயிற்று!" என்றார்.

சற்றுப் பின்னால் வந்த காலாள் வீரர்கள்—சுமார் முந்நூறு பேர்—அவர்களும் வந்து சேர்ந்தார்கள். வட்ட வடிவமாக நின்று வேடிக்கை பார்க்கலானார்கள்.


தற்குள் யானைமேல் அம்பாரியிலிருந்து ஒரு பெண் கீழே இறங்கினாள். குதிரைகளுக்கும் வீரர்களுக்கும் இடையிடையே புகுந்து வந்து அவள் வேடிக்கை பார்த்த வட்டத்தின் முன்னணியில் நின்று கொண்டாள்.

அவளுடைய முகத்தில் அச்சமயம் குடிகொண்டிருந்த கிளர்ச்சியை இப்படியென்று சொல்ல முடியாது. கத்திகள் அங்கு மிங்கும் பாய்ந்தபோது அவளுடைய கண் விழிகளும் பாய்ந்தன. போரிட்டவர்கள் அப்படியும் இப்படியும் குதித்தபோது அவளையறியாமல் அவளுடைய இடை துவண்டு அப்படியும் இப்படியும் ஆடியது. சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் தன் கூந்தலில் செருகியிருந்த காம்புடன் கூடிய நீலோத்பல மலரை எடுத்துக் கொண்டாள். அதை இப்படியும் அப்படியும் சுற்றிச் சுழற்றத் தொடங்கினாள். கத்திகள் சுழன்ற தாளத்துக்கு இசைய அவளுடைய கையிலிருந்த பூவின் தண்டு சுழன்றது.— இந்தப் பெண் யார் என்று வாசகர்களுக்கு நாம் சொல்ல வேண்டியதில்லை. ஆம்; பூங்குழலியை அவர்கள் மறந்திருக்க முடியாதல்லவா?

சிறிது நேரம் வரையில் அவளுடைய முகத்துக்கு எதிரே இளவரசர் முகம் தெரியும்படியாக அவ்வீரர்கள் நின்று போரிட்டனர். கொஞ்சம் கொஞ்சமாக நகர்ந்து பாதி வட்டம் சுற்றி வந்தனர். கடைசியில் வந்தியத் தேவனுடைய முகம் பூங்குழலியின் முகத்துக்கு எதிராக வந்தது. இடையிடையே வந்தியத் தேவனுடைய கண்கள் சுற்றிலும் பெருகி வந்த வீரர் கூட்டத்தைக் கவனித்து வந்தன. அப்போது பூங்குழலியையும் பார்த்து விட்டன. திடீரென்று அந்தப் பெண்ணைப் பார்த்த வியப்பினால் ஒரு கணம் அவன் கவனம் சிதறியது. அந்த ஒருகண நேரமே இளவரசருக்குப் போதுமாயிருந்தது. வந்தியத் தேவனுடைய கத்தியின் மீது தேவேந்திரனுடைய வஜ்ராயுதத்தைப் போல் இளவரசரின் கத்தி தாக்கியது. வாணர்குல வீரன் தடுமாறினான். அவனுடைய கைப்பிடியிலிருந்து நழுவிப் பட்டாக் கத்தி கீழே விழுந்தது.


ற்றிலும் கூடியிருந்தவர்கள் அச்சமயம் எழுப்பிய ஆரவாரம் அலைகடலின் ஓசையை ஒத்திருந்தது. அவ்வளவு ஆரவாரத்தையும்மீறிக் கொண்டு ஓர் இளம் பெண்ணின் உற்சாகமான சிரிப்பொலி கேட்டது.

வந்தியத் தேவன், கீழே விழுந்த

கத்தியை மீண்டும் எடுப்பதற்குப் பிரயத்தனம் செய்தான்.

இதற்குள் இளவரசர் பாய்ந்து சென்று அவனைக் கட்டித் தழுவிக் கொண்டார்.

"நீர் என்னுடைய வாளுக்குத் தோற்கவில்லை. வாளுக்கு வாள் சமமான லாகவத்துடன் போரிட்டீர். ஆனால் ஒரு பெண்ணின் கண் வாளுக்குத் தோற்றீர்! இதில் அவமானம் ஒன்றுமில்லை. எல்லோருக்கும் நேரக்கூடியதுதான்!" என்றார்.

வந்தியத்தேவன் அதற்கு ஏதோ சமாதானம் சொல்ல ஆரம்பித்தான். அதற்குள் சேனாதிபதி பூதி விக்கிரம கேசரியும் பார்த்திபேந்திரனும் அவர்களை நெருங்கி வந்து விட்டார்கள்.

"இளவரசே! இந்தப் பிள்ளையை நான்தான் தங்களிடம் அனுப்பினேன்! இவன் ஏதாவது தவறாக நடந்து கொண்டு விட்டானா? கொஞ்ச நேரம் கதி கலங்கிப் போய் விட்டோம்!" என்றார்.

"ஆம், தளபதி! இவருடைய ஏச்சை என்னால் பொறுக்க முடியவில்லை. 'இலங்கையில் யுத்தம் நடக்கிறது என்றார்களே, யுத்தம் எங்கே? யுத்தம் எங்கே?' என்று கேட்டு என்னைத் தொளைத்து விட்டார். 'இதோ யுத்தம்!' என்று காட்டினேன்!"

இவ்வாறு இளவரசர் கூறியதும் சுற்றியிருந்தவர்கள் அனைவரும் மறுபடியும் ஆரவாரம் செய்தார்கள்.

சேனாதிபதி வந்தியத்தேவனுடைய அருகில் வந்து அவன் முதுகில் தட்டிக் கொடுத்தார். "அப்பனே! இந்த மாதிரி கத்திச் சண்டை பார்த்து எத்தனையோ நாள் ஆயிற்று! இளவரசருக்குச் சரியான துணைவன் நீ! சில சமயம் அவருக்கு இப்படித்தான் திடீர் திடீர் என்று தோள் தினவு எடுக்கும்! 'குஞ்சரமல்லன்' என்று பெயர் பெற்ற பராந்தக சக்கரவர்த்தியின் வம்சத்தில் பிறந்தவர் அல்லவா? அவருடன் நேருக்கு நேர் நின்று சண்டை பிடிக்க முடியாதவர்கள் அவருடன் நெடுநாள் சிநேகமாயிருக்க முடியாது!" என்றார்.

இதற்குள் இளவரசர் பார்த்திபேந்திர பல்லவரின் சமீபமாகச் சென்று, "ஐயா! தாங்கள் என்னைத் தேடி வந்திருக்கிறீர்கள் என்று கேள்விப்பட்டேன். தங்களைச் சந்திப்பதற்காகவே விரைந்து வந்தேன். காஞ்சியில் தமையனார் சௌக்கியமா? என் பாட்டனார் எப்படியிருக்கிறார்?" என்று கேட்டார்.

"தமையனாரும் பாட்டனாரும் தங்களுக்கு மிகவும் முக்கியமான செய்தி அனுப்பியிருக்கிறார்கள். இலங்கைக்கு வந்து தங்களைக் கண்டு பிடிப்பதற்கே நாலைந்து தினங்கள் ஆகிவிட்டன. இனி ஒரு கணமும் தாமதிப்பதற்கில்லை......" என்று பார்த்திபேந்திரன் கூறுவதற்குள், இளவரசர்,

"முக்கிய காரியமாக இல்லாவிட்டால் தாங்களே புறப்பட்டு வருவீர்களா? இனி ஒருகணமும் தாமதிக்க வேண்டியதில்லை. இப்போதே செய்தியைத் தெரிவிக்க வேணும்!" என்றார்.

இச்சமயம் அவர்கள் சமீபத்தில் வந்த சேனாதிபதி பெரிய வேளார் "நடுச்சாலையில் இத்தனை பேருக்கு நடுவிலே ஒன்றும் பேச முடியாது. அதோ ஒரு பாழும் மண்டபம் தெரிகிறதே! அங்கே போகலாம்! நல்லவேளையாக இந்த இலங்கையில் பாழும் மண்டபத்துக்குக் குறைவு கிடையாது!" என்றார்.

சாலைக்கு அப்பால் கொஞ்ச தூரத்திலிருந்த பாழும் மண்டபத்தை நோக்கி அனைவரும் போனார்கள்.

---



அவன்: என் கனவிலே எப்போதும் கவர்ச்சி நடிகையையே பார்க்கிறேன்.

இவன்: டாக்டரைப் பார்த்தீர்களா?

அவன்: அதெல்லாம் இல்லை. கவர்ச்சி நடிகையை மட்டும்தான் பார்க்கிறேன்!

— புஷ்பவனம் பால. மனோகரன்.

# அத்தியாயம் 40
# மந்திராலோசனை

போகும்போது வந்தியத் தேவன் ஆழ்வார்க்கடியானை நெருங்கி, "இது என்ன, இளவரசர் இப்படிச் செய்கிறார்? அன்று திடீர் என்று குத்துச் சண்டை போட்டார்; இன்று கத்திச் சண்டையில் இறங்கினார். சொல்லி விட்டாவது சண்டையை ஆரம்பிக்கக் கூடாதா! இளவரசருடைய சிநேகம் மிகவும் ஆபத்தாயிருக்கும் போலிருக்கிறதே!" என்றான்.

இளவரசர் இதைக் கேட்டுக் கொண்டே அவர்கள் பக்கத்தில் வந்து விட்டார்.

"ஆம், ஐயா! என்னுடைய சிநேகம் மிகவும் ஆபத்தானதுதான். நேற்றிரவே அது உமக்குத் தெரிந்திருக்குமே? ஆபத்துக்கு உள்ளாகாமல் இருக்க வேண்டுமானால் நான் இருக்குமிடத்திலிருந்து குறைந்தது பத்து காத தூரத்தில் இருக்க வேண்டும்!" என்றார்.

"இளவரசே! அதற்காக நான் சொல்லவில்லை. தங்கள் பக்கத்திலிருந்து எந்தவித ஆபத்துக்கும் உட்படுவதற்கு நான் சித்தம். ஆனால் இப்படி நீங்கள் திடீர் திடீர் என்று...."

இப்போது வீர வைஷ்ணவன் குறுக்கிட்டு, "இது தெரியவில்லையா தம்பி உனக்கு? எதிரே வருகிறவர்கள் யார் என்று தெரிந்து அதற்குத் தக்கபடி காரியம் செய்வதற்காக இளவரசர் இந்த உபாயத்தைக் கையாண்டார்! வருகிறவர்கள் யாராயிருந்தாலும் கத்திச் சண்டையைக் கண்டால் கொஞ்சம் நின்று பார்ப்பார்கள் அல்லவா?" என்றான்.

இளவரசர், "திருமலை சொல்வதும் சரிதான். என்னுடைய ஜாதக விசேஷமும் ஒன்று இருக்கிறது. என்னுடன் யாராவது சிநேகமாயிருந்தால் அவர்களுக்கு மற்றவர்களின் அசூயையும் பகைமையும் நிச்சயம் சித்திக்கும். அதற்காக, நான் யாருடைய சிநேகத்தையாவது விரும்பினால் அவர்களுடன் அடிக்கடி சண்டை பிடிப்பது வழக்கம். இதைப் பொருட்படுத்தாதவர்கள்தான் என்னுடைய சிநேகிதர்களாயிருக்க முடியும்!" என்றார்.

"அப்படியானால் சரி! இனிமேல் தாங்கள் சண்டையை ஆரம்பிப்பதற்குக் காத்திராமல் நானே ஆரம்பித்து விடுகிறேன். இளவரசே! தங்களுக்குச் செய்தி கொண்டு வந்த நான் ஒரு முக்கியமான செய்தியைச் சொல்ல மறந்து விட்டேன். அதை இப்போது சொல்லி விட விரும்புகிறேன்! சொல்லியே ஆக வேண்டும். தாங்கள் கேட்க விரும்பா விட்டால், மறுபடியும் கத்தியை எடுங்கள்!" என்றான் வந்தியத் தேவன்.

"வேண்டாம்! செய்தியைச் சொல்லுங்கள், கேட்கிறேன்."

"நம்மைச் சுற்றி நின்ற கூட்டத்தில் ஒரு பெண் கையில் காம்புள்ள குமுத மலருடன் நின்று கொண்டிருந்தாளே, அவளுடைய கண் வீச்சுக்கு நான் தோற்று விட்டேன் என்று கூடத் தாங்கள் சொல்லவில்லையா? அந்தப் பெண் யார் தெரியுமா?"

"தெரியாது; அவளை நான் நன்றாய்ப் பார்க்கவில்லை. பார்க்கும் வழக்கமும் எனக்குக் கிடையாது."

"இளவரசே! அவள்தான் தங்களுக்கு ஒரு செய்தி சொல்லி அனுப்பினாள். சொல்லத் தவறி விட்டேன். எப்படிச் சொல்வது? தங்களைச் சந்தித்ததிலிருந்து தங்களுடன் துவந்த யுத்தம் செய்வதற்கும் தலையில் வீடு இடிந்து விழாமல் தப்புவதற்கும் சரியாயிருக்கிறதே! ஆகையால் சொல்லச் சரியான சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. திடீரென்று அந்தப் பெண்ணைப் பார்த்தபோது அவள் கூறிய செய்தியைச் சொல்ல வில்லையே என்ற நினைவு வந்தது. அப்போது சிறிது அசந்து விட்டேன். அந்தச் சமயம் பார்த்து என் கத்தியைத் தட்டி விட்டீர்கள்...."

''போகட்டும்; அந்தப் பெண் யார்? அவள் எதற்காக எனக்குச் செய்தி அனுப்ப வேண்டும்?''

''ஐயா! அவள் தான் பூங்குழலி.''

''அழகான பெயர். ஆனால் நான் கேள்விப்பட்டதில்லை.''

''ஐயா! 'சமுத்திர குமாரி' என்ற பெயர் நினைவிருக்கிறதா?''

''சமுத்திர குமாரி—சமுத்திர குமாரி — அப்படி ஒரு பெயரும் எனக்கு நினை



வில் இல்லையே! அவளைப் பார்த்ததாகக் கூட ஞாபகம் இல்லையே!''

''தயவுசெய்து கொஞ்சம் ஞாபகப் படுத்திக் கொள்ளுங்கள். தங்களுக்கு நினைவில்லையென்றால் அந்தப் பெண்ணின் நெஞ்சு உடைந்துவிடும். கோடிக்கரையில் தாங்கள் மரக்கலம் சேருவதற்காகப் படகில் ஏறச் சித்தமாயிருந்தீர்கள். அச்சமயம் ஒரு பெண் தன்னந் தனியாகப் படகு விட்டுக் கொண்டு கடலிலிருந்து கரைக்கு வந்தாள். தாங்கள் வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தீர்கள். அவளும் நீங்கள் எல்லாரும் யார் என்று தெரிந்து கொள்வதற்காக நீங்கள் நின்ற இடத்துக்குச் சமீபமாக வந்தாள். 'இந்தப் பெண் யார்?' என்று தாங்கள் கலங்கரை விளக்கத் தலைவரைக் கேட்டீர்கள். அவர் 'இவள் என் குமாரி' என்றார். தாங்கள் உடனே 'ஓகோ! இவள் உமது குமாரியா? சமுத்திர குமாரி என்றல்லவா நினைத்தேன்?' என்றீர்கள். அதை அந்தப் பெண் மறக்காமல் நினைவு வைத்துக்கொண்டிருக்கிறாள். அந்தப் பெண்ணின் உதவியினால்தான் நான் கடல் கடந்து இலங்கைக்கு வர முடிந்தது...''

''நீர் சொன்ன பிறகு எனக்கும் இலேசாகக் கொஞ்சம் நினைவுக்கு வருகிறது. ஆனால் கோடிக்கரை சமுத்திர குமாரிக்கு இங்கே அநுராதபுரத்துக்குச் சமீபத்தில் என்ன வேலை? இவர்களுடன் எதற்காக வந்திருக்கிறாள்? ஒரு வேளை உம்மைத் தேடிக் கொண்டா?...''

''இல்லை; அப்படி ஒரு நாளுமிராது. என்னைத் தேடி வர நியாயம் இல்லை. யாரையாவது தேடி வந்திருந்தால் அது தங்களைத் தேடித்தான் இருக்க வேண்டும். எதற்காக என்று எனக்குத் தெரியாது!''

ப்படிச் சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் சற்று தூரத்தில் சேநாதிபதியின் பக்கத்தில் வந்து கொண்டிருந்த பூங்குழலியைப் பார்த்தான்: அவள் தலை

குனிந்த வண்ணம் நடந்தாள். ஆயினும் அவளுடைய கவனம் கருத்து எல்லாம் இளவரசரிடமே இருக்கின்றன என்பதை உணர்ந்துகொண்டான். சிறிது நேரத்துக்கொரு தடவை அவளுடைய கடைக்கண் இளவரசரை நோக்குவதையும் அறிந்தான். அச்சமயம் அவளைப் பற்றித் தாங்கள் பேசுகிறோம் என்பதும் உள்ளுணர்வினால் அவளுக்குத் தெரிந்திருக்க வேண்டும். இல்லாவிடில் அப்படி அவள் குனிந்த தலை நிமிராமல் நடப்பதற்கு யாதொரு அவசியமும் இல்லையே! அம்மம்மா! ஒரு கணமும் பார்த்த திசையைப் பாராமல் ஓயாமல் சலித்துக் கொண்டிருக்கும் கண்கள் அல்லவா அவளுடைய கண்கள்!

மேற் கூரையில்லாமல் வேலைப்பாடான கருங்கல் தூண்கள் மட்டும் நின்ற மண்டபத்தை அவர்கள் அடைந்தார்கள். சுற்றிலும் ஓங்கி வளர்ந்திருந்த மரங்கள் அந்த மண்டபத்துக்கு ஓரளவு நிழலை அளித்தன. மண்டபத்தின் மத்தியில் ஒரு மேடான பீடமும் இருந்தது. அங்கே சென்று இளவரசரும் சேநாதிபதியும் பார்த்திபேந்திரனும் அமர்ந்தார்கள்.

வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் சற்றுத் தள்ளி நின்றார்கள்.

இன்னொரு பக்கத்தில் ஒரு தூணின் மறைவில் பூங்குழலி நின்றுகொண்டிருந்தாள். அங்கிருந்தபடி அவள் இளவரசரையும் வந்தியத் தேவனையும் பார்க்கக் கூடியதாயிருந்தது.

அந்தக் கூரையில்லாத மண்டபத்தைச் சுற்றிலும் வீரர்கள் வியூகம் வகுத்தது போல் இரண்டு வரிசையாக நின்றார்கள்.

இன்னும் சற்றுத் தூரத்தில் குதிரைகளும் யானையும் நிறுத்தப்பட்டிருந்தன.

இளவரசர் பார்த்திபேந்திரனைப் பார்த்து "என் தமையனாரும் பாட்டனாரும் என்ன செய்தி சொல்லி அனுப்பியிருக்கிறார்கள்? கேட்க ஆவலாயிருக்கிறேன்!" என்றார்.

"இளவரசே! சோழ ராஜ்யம் பெரிய அபாயத்துக்குள்ளாயிருக்கிறது. இது தங்களுக்குத் தெரிந்திருக்கும்...."

"ஆம், ஐயா! சக்கரவர்த்தி நெடுநாளாக நோய்ப்பட்டிருக்கிறார்...."

"அபாயம் அது மட்டுமல்ல; சாம்ராஜ்யத்துக்கே பேரபாயம் நேர்ந்திருக்கிறது. பெரிய அதிகாரங்களில் உள்ளவர்கள் துரோகிகளாகி விட்டார்கள். சக்கரவர்த்திக்கும் பட்டத்து இளவரசருக்கும் தங்களுக்கும் விரோதமாகச் சதி செய்யத் தொடங்கி விட்டார்கள். தங்கள் தமையனாருக்குப் பட்டம் இல்லை என்று சொல்லி விட்டுச் சிவபக்தி வேஷதாரியான உருத்திராட்சப் பூனை மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டுவது என்றும் தீர்மானித் திருக்கிறார்கள். பழுவேட்டரையர்களும், சம்புவரையர்களும், இரட்டைக் குடை இராஜாளியாரும், மழபாடி மழவரையரும், மற்றும் இவர்களைப் போன்ற வேறு பல துரோகிகளும் இந்தக் கூட்டுச் சதியில் சேர்ந்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் முயற்சி பற்றி நாம் சிறிதும் கவலைப்பட வேண்டியதில்லை. வடதிசை சைன்யமும் தென்திசை சைன்யமும் நம் வசத்தில் இருக்கின்றன. திருக்கோவலூர் மிலாடுடையாரும் கொடும்பாளூர்ப் பெரிய வேளாரும் நம் பக்கம் இருக்கிறார்கள். இவர்களுடைய உதவிகளைக் கொண்டும் சைன்யத்தின் துணை கொண்டும் துரோகிகளின் சதியை ஒரு நொடியில் சின்னாபின்னப் படுத்திவிடலாம். ஆனால் எதிரிகளுக்கு அதிக காலம் இடங்கொடுத்து விடக் கூடாது. துரோகிகளின் சூழ்ச்சியை முளையிலேயே கிள்ளி எறிந்து விட வேண்டும். இப்படிப்பட்ட நிலைமை ஏற்பட்டிருப்பதை முன்னிட்டுத் தங்களை உடனே காஞ்சிக்கு அழைத்து வரும்படியாகத் தங்கள் தமையனாரும் பாட்டனாரும் என்னை அனுப்பி வைத்திருக்கிறார்கள். இச்சமயத்தில் நீங்கள் சகோதரர்கள் இருவரும் பிரிந்திருக்கலாகாது என்றும் ஒரே இடத்தில் இருப்பது மிக அவசியம் என்றும் தங்கள் பாட்டனார் கருதுகிறார். இன்னும், தங்கள் தமையனாரின் உள்ளத்தில் இருப்பதையும் சொல்லிவிட விரும்புகிறேன். அவருக்கு ஒரே இடத்தில் இருந்து இராஜ்யம் ஆளுவதில் விருப்பம் இல்லை. கடல் கடந்த

நாடுகளுக்கெல்லாம் கப்பலேறிச் செல்ல வேண்டுமென்றும் அந்த நாடுகளையெல்லாம் வென்று சோழர் புலிக் கொடியைப் பறக்கவிட வேண்டுமென்றும் அவர் துடி துடித்துக் கொண்டிருக்கிறார். வடநாட்டுப் படையெடுப்புக்குப் பழுவேட்டரையர்கள் முட்டுக்கட்டை போட்டதிலிருந்து அவருடைய போர் வெறி ஒன்றுக்குப் பத்து மடங்கு ஆகியிருக்கிறது. ஆகையால் தாங்கள் காஞ்சி வந்து சேர்ந்ததும் தஞ்சைக்குப் படையெடுத்துச் சென்று சதிகாரர்களையெல்லாம் அதம் செய்து ஒழித்து விட்டுச் சோழ சிம்மாசனத்தில் தங்களை அமர்த்தி முடிசூட்டி விட்டு...''

இத்தனை நேரம் கவனத்துடனும் மரியாதையுடனும் கேட்டு வந்த இளவரசர் இப்போது தம் செவிகளைக் கையினால் மூடிக் கொண்டு, ''வேண்டாம்! அத்தகைய விபரீத வார்த்தைகளைச் சொல்லாதீர்கள். சோழ சிம்மாசனத்துக்கும் எனக்கும் வெகு தூரம்!'' என்றார்.

''தங்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் நான் சொல்லவில்லை. அது தங்களுடைய தமையனார் இஷ்டம்; தங்கள் இஷ்டம். நீங்கள் சகோதரர்கள் விவாதித்துத் தீர்த்துக் கொள்ள வேண்டியது. ஆனால் சதிகாரர்களை ஒழிப்பதில் இரண்டு பேரும் ஒன்றுபட வேண்டியது அவசியம். உடனே தாங்கள் காஞ்சிக்குப் புறப்பட்டு வாருங்கள். பழுவேட்டரையர்களையும் சம்புவரையர்களையும் பூண்டோடு அழிப்போம். சிவபக்தி வேஷதாரியான மதுராந்தகனைச் சிவலோகத்துக்கே அனுப்பி வைப்போம். பிறகு தாங்களும் தங்கள் தமையனாரும் யோசித்து உசிதம்போல் முடிவுசெய்யுங்கள்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''ஐயா! எல்லாம் நாமே முடிவு செய்ய வேண்டியதுதானா? என் தந்தை — சக்கரவர்த்தி — அவருடைய விருப்பம் இன்னதென்று நாம் தெரிந்து கொள்ள வேண்டாமா? ஒரு வேளை தாங்கள் தெரிந்து கொண்டிருக்கிறீர்களா? என் தமையனாருக்குத் தந்தையிடமிருந்து ஏதேனும் அந்தரங்கச் செய்தி வந்ததா....?''

''இளவரசே! இந்தச் சந்தர்ப்பத்தில் உண்மையைச் சொல்ல வேண்டியது அவசியம். மூடி மறைப்பதில் பயனில்லை. தங்கள் தந்தையின் விருப்பத்தை இச்சமயம் அறிந்து கொள்வது இயலாத காரியம். சக்கரவர்த்தி இப்போது சுதந்திர புருஷராயில்லை. பழுவேட்டரையர்களின் சிறையில் இருக்கிறார். அவர்களுடைய அனுமதியின்றி யாரும் சக்கரவர்த்தியைப் பார்க்க முடியாது; பேசவும் முடியாது. அவருடைய விருப்பத்தைத் தெரிந்து கொள்வது எங்ஙனம்? தந்தையைக் காஞ்சிக்கு வரச் சொல்வதற்காகத் தங்கள் தமையனார் பெரு முயற்சி செய்தார். காஞ்சியில் பொன் மாளிகை கட்டினார். சக்கரவர்த்தி விஜயம் செய்து கிரகப்பிரவேசம் செய்ய வேண்டும் என்று அழைப்பு அனுப்பினார். ஆனால் சக்கரவர்த்தியிடமிருந்து மறு ஓலை வரவில்லை...''

''என் தந்தை நோய்ப்பட்டிருப்பதும் நடக்க முடியாதவராயிருப்பதும் தெரிந்த விஷயந்தானே?''

''இளவரசே! தங்கள் தந்தை— மூன்று உலகங்களின் சக்கரவர்த்தி— காஞ்சிக்குக் காலால் நடந்து வரவேண்டுமா? யானைகள் குதிரைகள் இல்லையா? வண்டிவாகனங்கள் இல்லையா? தங்க ரதங்களும் முத்துச் சிவிகைகளும் இல்லையா? தலையால் சுமந்து கொண்டு வருவதற்கு முடிசூடிய சிற்றரசர்கள் ஆயிரம் பதினாயிரம் பேர் போட்டி போட்டுக் கொண்டு வர மாட்டார்களா? காரணம் அதுவன்று. பழுவேட்டரையர்களின் துரோகந்தான் காரணம். தஞ்சை அரண்மனை இப்போது சக்கரவர்த்தியின் சிறையாக மாறிவிட்டது... இளவரசே! தங்கள் தந்தையின் உயிரைக் காப்பாற்ற விரும்பினால் உடனே புறப்பட்டு வாருங்கள்!''



ந்த வார்த்தைகள் இளவரசரின் உள்ளத்தைக் கலக்கி விட்டன என்பது நன்றாகத் தெரிந்தது. அவருடைய களை பொருந்திய முகத்தில் முதன் முதலாகக் கவலைக் குறி தென்பட்டது.



எழுத்தாளர் ஏகாம்பரத்திற்கு ஒரு பத்திரிகை ஆசிரியரிடமிருந்து வந்த கடிதம்:
அன்புடையீர்,
தாங்கள் அனுப்பியிருந்த நகைச் சுவை நாவல், வருகிற பொங்கல் சிறப்பிதழில் நகைச்சுவைத் துணுக்காக வெளிவருகிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்!

— ரா. ஜோதிராமன்.

---

இளவரசர் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்து விட்டுச் சேநாதிபதியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார்.

''தளபதி! தங்களுடைய யோசனை என்ன? சிலநாளைக்கு முன்பு முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் வந்திருந்தார். அவர் என் தந்தையின் மதிப்புக்கும் அந்தரங்க அபிமானத்துக்கும் உரியவர். அவர் என்னை இலங்கையிலேயே சிலகாலம் இருக்கும்படி யோசனை சொன்னார். தாங்களும் அதை ஆமோதித்தீர்கள். 'இங்கே சண்டை ஒன்றும் நடக்கவில்லையே, நான் எதற்கு இருக்க வேண்டும்?' என்று கேட்டதற்குச் சமாதானம் சொன்னீர்கள். முதன் மந்திரி இதோ நிற்கும் வைஷ்ணவரிடம் அதே யோசனையைத் திரும்பச் சொல்லி அனுப்பியிருக்கிறார். என் தமக்கை இளையபிராட்டியிடம் எனக்கு எவ்வளவு மதிப்பு உண்டு என்பது தங்களுக்குத் தெரியும். அவர் இட்ட கோட்டை நான் தாண்ட மாட்டேன். இலங்கைக்கு அவர் வரச் சொல்லித்தான் வந்தேன். இளையபிராட்டி இதோ இந்த வாணர் குலத்து வீரனிடம் ஓலை அனுப்பியிருக்கிறார். ஒருவிதத்தில் என் தமக்கையின் செய்தியும் பார்த்திபேந்திரர் கூறியதை ஒட்டியிருக்கிறது. ஆனால் உடனே புறப்பட்டுப் பழையாறைக்கு வரும்படி எழுதி அனுப்பியிருக்கிறார். என் தமையனாரோ காஞ்சிக்கு வரும்படி இவரிடம் கூறி அனுப்பியுள்ளார். சேநாதிபதி! தங்களுடைய கருத்து என்ன?'' என்றார்.

''இளவரசே! இன்று காலை வரையில் தாங்கள் இந்த இலங்கைத் தீவிலேயே இருக்க வேண்டும் என்ற கருத்துடனேயே நான் இருந்தேன். நேற்றிரவு கூட இவருடன் நெடுநேரம் விவாதித்துக் கொண்டிருந்தேன். இவர் வெகு நேரம் வாதித்தும் நான் ஒப்புக் கொள்ளவில்லை. ஆனால் இன்று அதிகாலையில், அதோ நிற்கிறாளே, அந்தப் பெண் வந்து ஒரு செய்தி சொன்னாள். அதைக் கேட்டதும் என் கருத்தை மாற்றிக் கொண்டேன். தாங்கள் உடனே காஞ்சிக்குப் போக வேண்டியது அவசியம் என்று இப்போது எனக்குத் தோன்றுகிறது!'' என்றார் இலங்கைச் சேநாதிபதி.

தூண் மறைவிலே நின்று தன்னைக் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டிருந்த பூங்குழலியின் மீது இளவரசர் தம் பார்வையைச் செலுத்தினார்.

''அபிமன்யுவை நாலாபுறமும் பகைவர்கள் தாக்கிக் கொன்றதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். என்னை நாலாபுறமிருந்து வரும் செய்திகளே தாக்கிக் கொன்றுவிடும் போலிருக்கிறது!'' என்று இளவரசர் சொல்லிக் கொண்டார்.

''அந்தப் பெண் என்னதான் செய்தி கொண்டு வந்திருக்கிறாள்?'' என்றார்.

''அவளே சொல்லட்டும்!'' என்றார் பெரிய வேளார்.

பூங்குழலி தயங்கித் தயங்கி நடந்து வந்தாள். இளவரசர் முன்னால் வந்து நின்றாள். நாலு பக்கமும் திரும்பிப் பார்த்தாள். சேநாதிபதியைப் பார்த்தாள்; பார்த்திபேந்திரனைப் பார்த்தாள்; சற்றுத் தூரத்தில் நின்ற வந்தியத்தேவனையும் ஆழ்வார்க்கடியானையும் பார்த்தாள். இளவரசர் முகத்தை மட்டும் அவளால் ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை.

''பெண்ணே! சொல், சீக்கிரம்!''

என்றார் சேநாதிபதி.

பூங்குழலி ஏதோ சொல்ல முயன்றாள். ஆனால் வார்த்தைகள் ஒன்றும் வரவில்லை.

"ஆகா! இந்த உலகமே ஊமை மயமாகிவிட்டது போல் காண்கிறது!" என்றார் அருள்மொழிவர்மர்.

அவ்வளவுதான். பூங்குழலி தன் கண்ணிமைகளை உயர்த்தி ஒரு தடவை, ஒரு கணத்திலும் சிறிய நேரம் இளவரசரை நோக்கினாள். அதற்குள் அக் கண்களில் கண்ணீர் ததும்பி வழிய ஆரம்பித்து விட்டது. உடனே அங்கிருந்து ஓட்டம் பிடித்தாள். ஓடிப் போய்த் தூரத்தில் அடர்ந்து வளர்ந்திருந்த மரங்களுக்கிடையில் மறைந்தாள்.

எல்லாரும் வியப்புடன் அதைப் பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

வந்தியத்தேவன் முன் வந்து "ஐயா! இவள் முன்னொருதடவை இப்படித்தான் ஓடினாள். நான் தொடர்ந்து போய்ப் பிடித்து விட்டேன். அனுமதி கொடுத்தால் இப்போதும் சென்று பிடித்துக் கொண்டு வருகிறேன்!" என்றான்.

"அப்படியே செய்! ஆனால் அதற்குள் அவள் கொண்டு வந்த செய்தி என்ன என்பதைச் சேநாதிபதி சொல்லட்டும்!" என்றார் இளவரசர்.

அதற்குச் சேநாதிபதி, "அதை இரண்டே வார்த்தைகளில் சொல்லி விடலாம். இளவரசே! தங்களைச் சிறைப்படுத்திக் கொண்டு வருவதற்காகப் பழுவேட்டரையர்கள் இரண்டு பெரிய மரக்கலங்களையும் அவை நிறையப் போர் வீரர்களையும் அனுப்பியிருக்கிறார்கள். மரக்கலங்கள் தொண்டைமான் ஆற்றுக் கால்வாயில் புகுந்து மறைவான இடத்திலே வந்து நிற்கின்றன!" என்றார்.

(தொடரும்)

## அருள்வாக்கு

பாப புண்யத்துக்குக் காரணம் என்ன? அவற்றைச் செய்யாமல் நிறுத்த இஷ்டமிருக்கிறது: ஆனால் முடியவில்லை. ஒரு மரத்தைத் தழைக்காமற் செய்ய வேண்டுமானால் கிளைகளை வெட்டினால் முடியாது; அடி மரத்தை வெட்ட வேண்டும். வீட்டுக்கூரையிலே திரும்பத்திரும்பக் கரையான் புற்று உண்டாகிறது என்றால் மேலெழுந்தவாரியாக அந்தக் கூட்டைப் பெயர்த்தால் போதுமா? போதாது. இன்னொரிடத்தில் புற்று முளைக்கத்தான் செய்யும். கரையான் வைக்கும் தாய்ப் பூச்சியைப் பிடித்து அழித்தால்தான் புற்று எங்கும் எழும்பாமலே போகும். அதுபோலப்பாபத்துக்குமூலகாரணத்தை அறிந்து அதையே அழிக்க வேண்டும். பாபத்துக்கு மூலம் என்ன? கெட்ட காரியத்தினுடைய பலன்தான் பாபம். கெட்ட காரியம்தான் பாப மூலம். கெட்ட காரியம் எதனால் செய்கிறோம்? நமக்கு ஒரு வஸ்து வேண்டும் என்ற ஆசையிருக்கிறது. அதை அடைவதற்குக் குறுக்கு வழிகளிற் போகிறோம். அது பாபம். அதாவது பாபம் செய்யக் காரணம் ஆசை. ஒரு வஸ்து அழகாக இருந்தால் ஆசை உண்டாகிறது. நல்ல பதார்த்தங்களைக் கண்டால் நமக்கு வேண்டுமென்று ஆசை தோன்றுகிறது. அது நல்லது என்ற இச்சை உண்டாகிறது. இந்த இச்சையைப் பூர்த்தி பண்ணக் காரியங்கள் செய்கிறோம். இந்திரியங்கள் ஒன்றை அழகானதென்று அறிவதுதான் ஆசைக்குக் காரணம்.



இத்தனை நாழி நான் சொன்னதிலிருந்து ஏற்படுவது என்னவென்றால்:

நாம் செய்யும் பாபத்துக்கு மூலம் கெட்ட காரியம். கெட்ட காரியத்துக்கு மூலம் ஆசை. ஆகையால் நம் கஷ்டம் அனைத்துக்கும் மூல காரணமாகிய ஆசையை நிவர்த்தி பண்ணினால்தான் நிரந்தரமான துக்க நிவர்த்தி உண்டாகும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

# உங்கள் குடும்ப நலனுக்காக உழைக்கும் உங்களைக் கவனித்துக் கொள்வது யார்?

# புதிய Godrej® 165 லிட்டர்

உங்களை நன்கு கவனித்துக்கொள்ளத் தகுந்தபடி வடிவமைக்கப் பட்டுள்ளது புதிய கோத்ரெஜ் 165 லிட்டர் ரெஃப்ரிஜெரேட்டர்; எங்கு தேவையோ, அங்கு இடவசதி கொண்டது—காய்கறி டிரேயிலும், டோர் பேனலிலும்.



**ஏனைய 165 லிட்டர் ரெஃப்ரிஜெரேட்டர் களைவிட விசாலமான காய்கறி டிரே, முட்டை ரேக்.**

கோத்ரெஜ் காய்கறி டிரேயில் அதிகம் காய்கறிகள் வைக்கலாம்; நீண்ட காலம் பசுமையாகவும் இருக்கும்.

டோர் பேனலில் 15 முட்டைகள் வரை வைக்கலாம். வேறெந்த ரெஃப்ரிஜரேட்டரையும் விட இது அதிகம். உங்கள் குடும்பத் தேவை களுக்கு ஈடு கொடுக்கிறது புதிய கோத்ரெஜ்.



**10 பெரிய பாட்டில்கள் வைக்கக் கூடிய ஒரே 165 லிட்டர் ரெஃப்ரிஜெரேட்டர்**

திரும்பத் திரும்ப பாட்டில்களை நிரப்பும் வேலை இனியில்லை.

**இடவசதியை நன்கு பயன்படுத்த, தேவைப்படி மாற்றி அமைக்கக்கூடிய ஷெல்ஃபுகள்**

ஷெல்ஃபுகளை ஏற்றி, இறக்கி அமைக்கலாம். இதனால், பெரிய அல்லது பலவித வடிவமுள்ள பாத்திரங்களை வைக்கலாம்.



**புதிய தொழில்நுட்பத்தின் உதவியால் விரைவில் குளிர்விக்கும். மின் செலவு சேமிக்கும்.**

புதிய, கட்டுறுதியான, மின்சக்தி சேமிக்கும் கம்ப்ரெஸர்; அத்துடன் சர்வதேச தரமேன்மையுள்ள பாலியூரெத்தேன் இன்சுலேஷன் இவை காரணமாக, ரெஃப்ரிஜெரேட்டர் விரைவில் குளிரும்.

நவீன தொழில்நுட்பம் மின்சக்திச் செலவைக் குறைத்து, மின்கட்டணம் சேமிக்க உதவுகிறது.

**மேன்மையான ஃபினிஷ்...எல்லாவற்றுக்கும் மேலாக!**

எபோக்ஸி பவுடர் வேய்ந்த ஃபினிஷ் மூலம் கவர்ச்சி யான, கீறலே விழாத, நீடித்து நிலைக்கும் வெளிப்புறம்.

ஒன்று செய்யுங்கள்...கடைக்குச் சென்று ஒரு புதிய கோத்ரெஜ் வாங்குங்கள். அது உமது குடும்பத்தை நன்கு கவனித்துக் கொள்ளும்.

# ரெஃப்ரிஜெரேட்டர்.



Godrej®

**புதிய ரெஃப்ரிஜெரேட்டர்—உழைக்கும் ஒவ்வொரு இல்லத்தரசிக்கும் இன்றியமையாதது.**

HTA-1640




இப்போது அல்ல. எப்போதுமே ராகவனுக்கு முன்கோபம் அதிகம். முன்னைவிடத் தற்சமயம் கொஞ்சம் குறைந்திருப்பதாக வேண்டுமானால் கூறலாம்.

திருமணம் ஆன ஆறும் மாதம். பகல். இரண்டு மணி சிற்றுண்டிக்காக அவன் அலுவலகத்திலிருந்து வீடு வந்திருந்தான். உடனே திரும்பியாக வேண்டும். அவசர அவசரமாகக் காப்பி கலந்து கொண்டு வந்த கீதா, அதில் சர்க்கரை சேர்க்க மறந்துவிட்டிருந்தாள்.

ஒரு வாய் காப்பியை விழுங்கியவன் முகம் மாறியது. "கீதா!" எனக் கர்ஜித்தான். ஓடி வந்தவள் முகத்தில் கோப்பையில் இருந்த காப்பியை அப்படியே விசிறி அடித்தான்.

"காப்பி கலக்கிறாளாம் காப்பி! முகரையைப் பார்!" எனச் சீறியவன் திரும்பிப் பார்க்காமல் ஸ்கூட்டரை உதைத்துக் கொண்டு புறப்பட்டுப் போய் விட்டான்.

மாமனார், மாமியார் மற்றும் இரண்டு நாத்தனார்கள் பார்த்துக் கொண்டுதானிருந்தார்கள். ஒரு வார்த்தை பிள்ளையைக் கண்டிக்கவில்லை. "ஐயோ, பாவம்" என அனுதாபப்படவில்லை. 'அவனுக்கு இப்படித்தான் சட்டுனு கோபம் வந்துவிடும்' எனப் பெருமைப்பட்டுக் கொண்டாள் தாயார்.

கண்களில் துளிர்த்த நீரை அடக்கிக் கொண்டு, தரையெங்கும் சிந்தியிருந்த காப்பியைத் துடைத்தாள். குளியல் அறைக்குப் போய் உடுத்தியிருந்த பட்டுப் புடவையிலும், ரவிக்கையிலும் தெறித்திருந்த காப்பிக் கறைகளைத் துவைத்து உலர்த்திவிட்டு, வேறு உடை மாற்றிக் கொண்டு — எதுவுமே நடவாதது போல் ராகவன் மாலையில் திரும்புவதை எதிர்நோக்கியிருந்தாள்.

அலுவலகம் போய்ச் சேர்ந்த ராகவனுக்கும் மனம் சரியில்லை.

"அது என்ன அப்படிக் கோபம் எனக்கு? என்ன தப்பு இப்போது பெரிதாக நடந்துவிட்டது? பாவம்... அவளுக்குத்தான் அத்தனை பேர் எதிரிலும் எத்தனை அவமானம்?" எனச் சங்கடப்பட்டான் அவன்.



இனிமேல் இப்படி நடக்ககூடாது என்ற தீர்மானத்துடன்தான் வீடு திரும்பினான்.

கீதா பகலில் அவன் நடந்து கொண்ட விதத்திற்காக முகத்தைத் திருப்பி வைத்துக் கொள்ளவும் இல்லை. தூக்கி வைத்துக் கொள்ளவும் இல்லை. எப்போதும் போல் சிரித்த முகத்துடன்தான் இருந்தாள்.

பக்கத்தில் யாரும் இல்லை என்பதை உறுதிப்படுத்திக் கொண்டு "ஏய் கோபமா?" எனச் சீண்டினான் ராகவன்.

"இல்லையே!" என்றாள் அவள்.

இப்படி அவன் நடப்பது முதல் தடவையல்ல.

திருமணம் முடிந்து வந்த புதிதில் இருவரும் திரைப்படம் பார்க்கப் போயிருந்தார்கள். அங்கே கீதாவின் பள்ளித் தோழி யதேச்சையாகப் பக்கத்து இருக்கையில் வந்து அமர்ந்து விட்டாள். ஒரே தொண தொண. இடைவிடாத வம்பு. ராகவன் பொறுமை இழந்தான்.

படத்தின் இடைவேளையின் போது வெளியே வந்தவன் கோபத்துடன், தான் மட்டும் வீடு வந்து சேர்ந்து விட்டான்.

படம் பார்க்கும் சுவாரசியத்தில் ராகவன் திரும்பிவிட்டதைக் கீதா உடனே கவனிக்கவில்லை. பின்னர் பார்த்த போது தன் தோழியின் தொணதொணப்புத் தாங்காமல், வேறு எங்கேயோ உட்கார்ந்திருப்பான் என நம்பினாள். படம் முடிந்த பிறகு அவனைக் காணாமல் பதறிப் போய் — ஊர் வேறு புதிது— தன் தோழியிடம் கெஞ்ச — அவள் வீடுவரை கொண்டு சேர்த்து விட்டுப் போனாள்.

எவளோ ஒருத்தியுடன் பேசுவதற்கா சினிமாப் போனோம்? எனக்கு வம்பு பேசுவது பிடிக்காது என்று தெரியுமல்லவா?— வாயை மூடிக் கொண்டு இருக்க வேண்டாமா? எனத் தன் செயலுக்கு நியாயம் கற்பித்தான் ராகவன்.

ராகவனின் அம்மா தன் பிள்ளையை ரொம்பவும் கடிந்து கொண்டாள். "அத்தனை நகையும் போட்டுக் கூட்டிப் போய்த் தனியாக விட்டு விட்டு வந்து இருக்கிறாயே... ஒன்று கிடக்க ஒன்று நடந்தால் என்ன ஆவது?" எனச் சாடினாள்.

ஐம்பது பவுன் ஆயிற்றே... சும்மாவா?... வெறும் கழுத்துடன் போயிருந்தால் நிச்சயம் பிள்ளையை அதட்டியிருக்கமாட்டாள்.

மாமியார் வீட்டில் அவனைத் தீபாவளிக்கு அழைத்திருந்தார்கள்.. தலை தீபாவளி இல்லை... நான்கைந்து ஆண்டுகள் கழித்து...

கீதாவுடன் அவன் போயிருந்தான். அவளுக்காக அவன் ஒரு புடைவை எடுத்திருந்தான். கீதாவின் வீட்டிலும் அவளுக்குத் தனியாக ஒரு புடைவை வாங்கியிருந்தார்கள். கங்கா ஸ்நானம் செய்துவிட்டு வந்த கீதா, தன் பிறந்த வீட்டில் தந்த புடைவையை உடுத்திக் கொண்டு வந்து அவனை நமஸ்கரித்தாள்.

அவ்வளவுதான்... வந்து விட்டது கோபம் ராகவனுக்கு.

தன்னை அலட்சியம் செய்து விட்டாள் என்ற ஆத்திரம். தான் வாங்கிய புடைவையைக் காட்டிலும் அவள் தாய் வாங்கியதை உயர்த்தியாக நினைத்து விட்டாள் என்ற வேகம்.

எல்லோர் முன்னிலையிலும் — அவர்கள் வீட்டு வேலைக்காரியைக் கூப்பிட்டு— தான் கீதாவிற்காக வாங்கிய நானூறு ரூபாய் மதிப்புள்ள புடைவையை இனாமாகத் தந்து விட்டான்.

ஏதோ பேச வாயெடுத்த தன் தாயாரைக் கீதா அடக்கி வைத்தாள்.

பின்னர் நிதானமாக யோசித்த போது தான், ராகவனுக்குத் தான் செய்தது எத்தனை மதியீனம் எனப் புரிந்தது. அவன் அங்கலாய்த்த போதும் கூடக் கீதா அவன் பக்கம் தான் பேசினாள்.

"நான் செய்தது தப்பு... நீங்கள் வாங்கிக் கொடுத்ததைத்தான் முதலில் கட்டிக் கொண்டிருக்க வேண்டும்!" என ஒப்புக் கொண்டாள்.

"இது என்னடா கூத்து?" எனத் தனிமையில் ஆரம்பித்த அம்மாவிடம் "இப்போது அவருக்கு வந்த கோபம் கம்மி. எப்போதும் போல் ஆத்திரப்பட்டாரானால் புடைவையைக் கிழித்தே போட்டிருப்பார்!" எனச் சமாதானம் சொன்னாள் கீதா.

பிள்ளை பிறந்த பிறகு — முடி இறக்குவதற்காக இருவரும் திருப்பதி போயிருந்தார்கள். 'காட்டேஜ்' ஒன்று எடுத்துத் தங்கியிருந்தார்கள். ஒருமுறை வெளியே போய்த் திரும்பும் போது— காட்டேஜ் பூட்டியிருந்த பூட்டின் சாவியை — அவன்தான் எப்போதும் வைத்திருப்பது — ராகவன் தொலைத்து விட்டான்.

அதற்காக ராகவன் வருத்தப்படவில்லை. "ஒரு சின்னச் சாவியைக் கூட நீ வைத்துக் கொள்ளக் கூடாதா? எல்லாமே என் தலையில்தானா?"— என அவளைத்தான் குற்றம் சாட்டினான்.



உதவி ஆசிரியர்: ஸாரி சார்! இந்த இதழில் நிறைய அச்சுப் பிழைகள் நேர்ந்துடுச்சு...

ஆசிரியர்: இவ்வளவுதானே! கடைசிப் பக்கத்தில் 'இந்த இதழில் உள்ள தவறுகளைக் கண்டுபிடியுங்கள். பரிசுகளை வெல்லுங்கள்' என்று போட்டு விடுங்கள்!

— என். குமாரவேல்.

---

கீதா மௌனமாகத் தன் தாலிக் கயிற்றில் பத்திரப்படுத்தி இருந்த மாற்றுச் சாவியை எடுத்துத் திறந்த போது, "இத்தனை நேரம் அழ வைத்து வேடிக்கை பார்த்தாயே... உனக்குத் திருப்திதானே?" — என எரிந்து விழுந்தான்.

இப்படி எத்தனை எத்தனையோ சம்பவங்களை அடுக்கிக் கொண்டே போகலாம். எதற்கெடுத்தாலும் கோபம்... எப்போதும் சிடுசிடுப்பு.

குளிப்பதற்கு வெந்நீர் எடுத்து வைப்பதிலிருந்து, காலணிகளுக்குப் "பாலிஷ்" போடுவது வரை அவள் பார்த்துப் பார்த்துத்தான் செய்தாள். இருந்தும் கூட ஏதாவது தவறு நேர்ந்துவிடும். அவன் துர்வாசனாகி விடுவான்.

கோபம் வரும் சமயம் என்ன செய்வான் எனத் தெரியாது. ஒருமுறை அவள் அவன் 'பாண்ட்'டிற்கு இஸ்திரி போட்டுக் கொண்டு இருந்தாள். வேறு எதற்கோ கூப்பிட்டான். அவள் இஸ்திரிப் பெட்டியை நிமிர்த்தி விட்டுத்தான் போயிருந்தாள். எப்படியோ அது சற்றுச் சாய்ந்து, அவன் "பாண்டி"ன் ஒரு மூலையில் சிறிது தீய்ந்து விட்டது.

பதறிப் போய் எடுப்பதற்குள் அவன் வந்து விட்டான். "போச்சு!... போச்சு... என் மாமா அமெரிக்காவிலிருந்து வாங்கி வந்த துணி... கொஞ்சமாவது அக்கறை இருந்தால்தானே!" என்றவன் சட்டென்று கீதாவின் உள்ளங்கையைப் பிடித்து இழுத்துச் சூடான இஸ்திரிப் பெட்டியை வைத்துத் தேய்த்து விட்டான்.

"அம்மா!" என அலறினாள் அவள். உள்ளங்கை அப்படியே கன்றிப் போய் விட்டது. எரிச்சல் தாங்காமல் துடித்தாள்.

ராகவனே ஓடிப் போய் 'பர்னல்' எடுத்து வந்தான். "ஐ ஆம் வெரி ஸாரி, கீதா... கோபம் வந்தால் நான் மிருகமாகி விடுகிறேன்" என உண்மையில் மனம் வருந்தியவனாகப் புண்ணிற்கு மருந்திட்டான்.

அவள் அப்போதும் முகம் சுளிக்கவில்லை. "நான் இஸ்திரிப் பெட்டியைச் சரியாக வைத்து விட்டுப் போயிருக்க வேண்டும். என் தப்புதான்!" என்றாள்.

இப்படித் தொடங்கிய அவர்கள் மண வாழ்க்கை தன்னுடைய வெள்ளி விழாவை நெருங்கிக் கொண்டிருந்தது.

இரண்டு பெண்கள், ஒரு பிள்ளை.. மூன்று பேரும் குணத்தில் அப்படியே ராகவனை உரித்து வைத்துக் கொண்டு பிறந்திருந்தார்கள்.

அம்மாவைக் குற்றம் சொல்வதில், கோபிப்பதில், நிஷ்டூரமாகப் பேசுவதில் ராகவனேதான்! சில சமயங்களில் ராகவனே கூட அவர்களைக் கண்டிக்க வேண்டி வந்தது.

இரண்டாவது பெண் கல்யாணம் முடிந்து புக்ககம் போன சமயம். ராகவனுக்கு விடுமுறை முடிய இரண்டு நாட்கள் மட்டும் இருந்தன. கல்யாணச் செலவுகளைக் கணக்கிட்டுக் கொண்டிருந்தான் ராகவன். எங்கெங்கெல்லாமோ பணம் வாங்கியாகி விட்டது. எப்படித் திருப்புவது என்பதுதான் யோசனை.

மணி மூன்றாகி விட்டது. இன்னும் காப்பியைக் காணோம்.

அவள் என்ன செய்து கொண்டிருக்கிறாள். "ஏய்! கீதா!"— இரைந்து கூவினான். பதிலே இல்லை.

அயர்ந்து தூங்கிப் போய் விட்டாளா என்ன?... வழக்கமான கோபம் பொங்கி எழ உள்ளே போனான். பகல் நேரத்தில் இப்படிப் பொறுப்பில்லாமல் என்ன தூக்கம்? காலால் உதைத்து எழுப்ப வேண்டியதுதான்!

"அம்மா!" — என்று ஈனஸ்வரத்தில் ஒரு முனகல்.

ராகவன் சட்டென்று அவள் பக்கத்தில் உட்கார்ந்தான். கீதாவின் முகத்தை மெதுவாகத் திருப்பினான். அவளுக்குத் தெப்பமாக வியர்த்திருந்தது.

"நெஞ்சை என்னவோ உடைக்கிறது... ரொம்ப வலி!" என விம்மினாள். பாதிதான் அவளால் பேச முடிந்தது.

"என்னைக் கூப்பிடுவதற்கு என்ன?" — இப்போதும் அதட்டல்தான்.

"நீங்கள் ஏதோ வேலையாக இருந்தீர்கள்.. சிரமப்பட வேண்டாமென்றுதான்."

அவள் அவன் மார்பை நீவி விட்டான்.

"கொஞ்சம் இரு... வெந்நீர் போட்டுக் கொண்டு வருகிறேன்..." எனக் கூறி அவளைச் சுவரில் சாய்த்தபடி உட்கார வைத்து விட்டுச் சமையல் அறைக்கு விரைந்தான்.

அங்கே 'ஸ்டவ்'விற்குப் பக்கத்தில் அவனுக்காக அவள் தயாரித்து வைத்திருந்த "காப்பி" இருந்தது. அதை எடுத்துத் தருவதற்குள் நெஞ்சுவலி வந்து விட்டதோ?

வெந்நீர் எதற்கு! இந்தக் காப்பியையே கொடுத்துப் பார்க்கலாமே! காப்பியை எடுத்து வந்தவன் திடுக்கிட்டான்.

சுவரில் சாய்மானமாக உட்கார வைத்து விட்டுப் போன கீதா இப்போது கீழே சரிந்து கிடந்தாள் — கண்கள் குத்திட்டு நிற்க.

ராகவன் அலறினன்.

சீதா போய்ச் சேர்ந்து பதினைந்து நாட்கள் ஆகிவிட்டன. இரண்டு பெண்களும் சீதாவின் பெட்டியைக் குடைந்தனர். நகைகள் புடைவைகளைத் தங்களுக்குள் பங்கு போட்டுக் கொண்டனர். சீதாவின் புடைவைகளுக்கு அடியில் ஒரு பெரிய நோட்டுப் புத்தகம்.

முதல் பெண் அதை எடுக்க, இரண்டாவது பெண் பிடுங்கிக் கொண்டாள். "உம்... அது அம்மா ஸ்ரீராம ஜெயம் எழுதற நோட்டுடி... அப்பா கிட்டக் கொடு." என்றாள் மூத்தவள்.

ஆனால் நோட்டைப் பிரித்தவள் அதிலேயே லயித்து விட்டாள். அவள் தோள் மேல் சாய்ந்து படித்த மூத்த பெண் அப்படியே சிலையாகிப் போனாள்.

அது வெறும் ஸ்ரீராம ஜெயம் நோட்டு மட்டும் இல்லை.. தன் தாம்பத்திய வாழ்க்கையில் தனக்கு ஏற்பட்ட முக்கியமான அனுபவங்களையெல்லாம் ஒன்று விடாமல் குறித்து வைத்திருந்தாள். தனக்குப் பொறுமையைக் கொடுக்கும்படி ஆண்டவனைப் பிரார்த்திக்காத குறிப்பே இல்லை.

எப்படி அவளுடைய தாயார் கணவனுடன் வார்த்தைக்கு வார்த்தை பதிலடி கொடுத்து, தாம்பத்தியம் முறிந்து போயிற்று என்பதைக் கவனத்திற்குக் கொண்டு வந்து, தன் வாழ்க்கையில் அப்படி ஒரு விபரீதம் நடக்காமல் இருக்க ஆண்டவனை வேண்டினாள்.

தன் பெண்களைப் பற்றிய கவலையையும் குறித்திருந்தாள். "இப்படிப் பொறுமையில்லாமல் இருக்கிறார்களே... நல்ல பிள்ளைகளாக அமைய வேண்டுமே!...

இரண்டாவது பெண் கல்யாணம் முடிந்த மறுநாள்... இறப்பதற்கு நான்கு நாட்கள் முன்பு... அதுதான் அவள் கடைசியாக எழுதியிருந்தது.

'இன்று கட்டுச் சாதக் கூடையுடன் சம்பந்திகள் புறப்பட்டு விட்டார்கள். ஆரத்தி எடுக்கப் போகும் போது தலையை சுற்றியது. கொஞ்சம் நிதானிப்பதற்குள் "ஏ! அசமஞ்சம்! அங்கே என்ன செய்யறே!" என அவர் அதட்டினர். அத்தனை பேர் எதிரிலும்.. இத்தனை வருஷங்கள் வராத கோபம் எழுந்தது. திருப்பிப் பேச வாயெடுத்து விட்டேன். ஆண்டவனே!... எனக்குக் கோபம் வரும்படி செய்யாதே... பூவோடு மஞ்சளுமாக அவர் பக்கத்தில் இருக்கும்போதே போகும் பாக்கியத்தைக் கொடு!'

பெண்கள் இருவரும் தேம்பித் தேம்பி அழுவதைக் கண்ட ராகவன் அந்த நோட்டுப் புத்தகத்தைத் தானும் வாங்கிப் படித்தான். அவனாலும் தன்னை அடக்கிக் கொள்ள முடியவில்லை.

வெவ்வேறு துருவங்களாக இணைந்து நடத்திய தாம்பத்ய நாடகம் ஒரே ஒருமுறை— தவறுகளைத் திருத்திக் கொள்ள மறு சந்தர்ப்பம் இல்லாமல் — நடந்து ஓய்ந்தது!



# நிற்க நிழல் வேண்டும்

## வாஸந்தி

## 23

பிரபு அசையாமல் நின்றான். தெளிவாகக் கேட்டன வார்த்தைகள். அவன் நின்ற இடத்திலிருந்து சற்று எட்டியிருந்த மூடிய அறையிலிருந்து ஒலித்தன.

"எங்கள் பூந்தோட்டத்தில்
மலர்களில்லை; மரங்களில்லை;
கூவிக் குரலெழுப்பும்
குயில்கள்தான் எதுவுமில்லை.
எம் நாடு சாம்பல் மேடாய்
இரத்தக் கறைச் சிதறல்களாய்—
எங்கள் உயிர் துடிக்கின்றது
வதையின் கதை தொடர்கின்றது."

ராகத்தோடு பாட்டில்லை. கவியரங்கத்தில் ஒப்பிப்பதுபோல் திரும்பத் திரும்ப வரிகள் முன்னும் பின்னுமாகச் சோகத்துடன் வெளிப்பட்டன, ஞாபகப்படுத்தலைப் போல.

இது நிச்சயம் விஜயபாலசூர்யாவின் அறையாக இருக்க முடியாது என்று அவன் நினைத்துக் கொண்டான். அவருக்குத் தமிழ் தெரிந்திருக்கும் என்று தோன்றவில்லை. கதவைத் தட்டிப் பார்க்கலாமா என்று நினைத்துப் பிறகு தயக்கத்துடன் பின்வாங்கினான்.

நமது குருட்டு ஊகம் சரியாக இருக்குமா? இது சீலியாவின் அறையாக இருக்குமா? அவள் நிச்சயம் தமிழ்ப் பெண். ஜயசீலனின் சீலியாவாக இருக்க வேண்டும் என்பதில்லை தான். இருந்தும் அவள் தமிழ்ப் பெண் என்கிற எண்ணம் தெம்பை அளித்தது. அவள் இந்த அறையில் இல்லையென்றால் வேறு யார்தான் இருக்க முடியும்? திரிகோணமலைக்குச் சென்றிருந்த பாலசூர்யாவுடன் யாராவது விருந்தாளி வந்திருக்கலாமோ?

அவன் இருட்டில் துழாவி ரேழி விளக்கின் விசையைத் தட்டினான். சட்டென்று பாட்டொலி நின்றது. சர்வ நிசப்தம் பரவிற்று. சமையலறைக்குச் சென்று ஜக்கில் நீரை நிரப்பிக் கொள்ளும் போது, அந்த அறையில் சீலியாதான் இருக்க வேண்டும் என்று உள்ளுணர்வு ஊர்ஜிதப்படுத்திற்று. அவள்தான் ஒரு தொட்டாற் சுருங்கியைப் போல் பதுங்கிக் கொள்பவள். தன்னுடைய உள் மனத்துச் சோகங்களையெல்லாம் திமிர்ப் போர்வையில் மறைத்துக் கொள்பவள். அவள் மட்டும் வாயைத் திறந்து பேசுவானானால் எவ்வளவு நல்ல கதை கிடைக்கும்!

அவன் மீண்டும் ரேழியைக் கடந்து விளக்கை அணைத்துவிட்டு, இன்று மேற்கொண்டு எந்த வேலையும் செய்ய முடியாது என்ற நினைப்புடன் படுத்துக் கொண்டான். இன்று மாலை ஏற்பட்ட சோர்வெல்லாம் நழுவி மனதில் ஒரு புதிய சுவாரஸ்யம் புகுந்து கொண்டிருந்தது. சீலியாவுடன் பேச வேண்டிய பேச்சை மீண்டும் மீண்டும் ஒத்திகை பார்த்துத் திருப்தியுடன் தூங்கிப் போனான்.

காலை ஆகாரத்துக்குச் செல்லத் தயாராகி, அவன் வெளியில் வந்து பார்த்தபோது, ரேழியை ஒட்டிய அறை பூட்டியிருந்தது. இத்தனை சீக்கிரம் எங்கே போய் விட்டாள் என்கிற ஏமாற்றத்துடன் அவன் சாந்தி விஹாருக்குக் கிளம்பினான்.

தெருக்கள் அமைதியாகத் தெரிந்தன. ஊரடங்குச் சட்டம் இன்னும் அமுலில் இருந்தது. பெரிதாக ஏதேனும் அபாயம் ஏற்படலாம் என்கிற ஹேஷ்யப் பேச்சுக்கள் எங்கு சென்றாலும் தினமும் அவன் காதில் பட்ட வண்ணம் இருந்தன. அவன் கண்ணையும் காதையும் தீட்டிக் கொண்டு நடந்தான்.

சாந்தி விஹாருக்குள் நுழைந்ததுமே ஈசுவரன் கண்ணில் பட்டான். பிரபுவைப் பார்த்துப் பரிச்சயத்துடன் கையசைத்துச் சிரித்தான், பேச ஆள் கிடைத்த உற்சாகத்துடன்.

"குட்மார்னிங்!" என்று பிரபு அவனெதிரில் அமர்ந்து கொண்டான்.

"இன்னிக்கு எப்படியிருக்கீங்க? எதிர்காலத்தைப் பற்றின நம்பிக்கை தெரிகிறதா?" என்றான்.

ஈசுவரன் புன்னகை செய்து இரண்டு ஆள்காட்டி விரல்களைக் குறுக்காக வைத்துக் காண்பித்தான்.

பிரபுவைக் கண்டதும் ஓடி வந்த கண்ணன், "வணக்கம் சார் ஸ்பெஷலாய்ப் புட்டு செஞ்சிருக்கோம். கொண்டு வரவா?" என்றான்.

"கொண்டு வா, இவருக்கும் சேர்த்து."

"அவர் சாப்பிட்டாச்சு" என்ற கண்ணன் நகர்ந்தான்.

பிரபுவிடம் ஒரு சிகரெட்டை நீட்டி லைட்டர் ஃப்ளேமைக் காட்டிப் பற்ற வைத்து ஈசுவரன் ஓர் இழுப்பு இழுத்துச் சிரித்தான்.

"உங்களுக்கு எப்படியிருக்கிறது. நம்பிக்கை ஏற்பட்டிருக்கா?"

"ஏற்பட்டிருக்கு" என்றான் பிரபு. "நான் தினமும் நிறையப் பேரோடு பேசறேன் ஈசுவரன். இந்தியாவுடைய அதிகாரத்துக்கு உட்பட்டு விட்டதாக — தமிழர்களுக்கு அதிகச் சலுகை கொடுக்கப்பட்டு விட்டதாகச் சில

பேர் நினைச்சாலும், சமாதானத்தைக் கொண்டுவரக் கூடிய இந்த உடன்படிக்கை அமுலுக்கு வரணும்னுதான் எல்லாரும் ஆசைப்படறதாத் தெரிகிறது ....''

ஈசுவரன் புகையை மேல்நோக்கி ஊதிக் கண்களை மூடிக் கொண்டான்.

''உங்களுக்கு அந்த ஆசை இல்லையா ஈசுவரன்?''

ஈசுவரன் கண்ணைத் திறந்து அவளைப் பார்த்துச் சிரித்தான்.

''எல்லாரும் ஆசைப்பட்டதினாலே அது நிறைவேறிடுமா? நிலைமை அவ்வளவு எளிமையானதில்லே!''

''அப்படின்னு சொல்லிச் சொல்லி நீங்களேதான் குழப்பிக்கிறீங்க!'' என்றான் பிரபு மெல்லிய எரிச்சலுடன். ''உங்களையெல்லாம் உண்மையிலேயே என்னால் புரிஞ்சுக்க முடியல்லே. இவ்வளவு வருஷமாய் போராடிக்கிட்டு வர்றீங்க. ஒரு தலைமுறையுடைய வாலிபம் முழுசும் போச்சு. அடுத்ததுடைய பால்யம் போச்சு. அப்படியிருக்க, நீங்க எதிர்பார்த்தபடியான ஓர் அமைப்பு உருவாகும் போலச் சந்தர்ப்பம் கூடி வர்ற சமயத்திலே பின் வாங்கறீங்க. உங்களுக்கெல்லாம் என்னதான் வேணும்? தனி ஈழமா?''

ஈசுவரன் கொஞ்சங்கூடப் பதற்றப்படாமல் ''இல்லை'' என்றான். ''அநேகமா எல்லாருமே அந்தக் கோரிக்கையைக் கைவிட்டுக் கனகாலமாச்சு. சில பேர் அதை மறுபடி சொன்னாலும் வெறும் பிரசாரத்துக்குத்தான். எத்தனையோ கேள்விகளுக்கும் சந்தேகங்களுக்கும் இந்த உடன்படிக்கையிலே சரியான பதில் இல்லை என்றாலும் அது அமுலுக்கு வரணும் என்றுதான் நான் ஆசைப்படறேன் பிரபு. ஏன் என்டா குற்றமில்லாத் தமிழர்கள் அரசாங்கத்தாலே நிர்மூலமா அழிக்கப்படறது அதனாலே நிற்கும். போர் நிறுத்தம் வந்தாப் புனருத்தாரண வேலையைத் துவங்கலாம். தமிழ்ப் பொடியன்களுக்கு ஆக்கபூர்வமான அரசியல் பிரக்ஞையை உருவாக்கலாம். உங்களுக்குப் புரியாது பிரபு... எங்க சமூகத்திலே ஏற்பட்டிருக்கிற சீர்குலைவு சாதாரணச் சீர்குலைவு இல்லே. நாற்பது வருஷமாத் தொடர்ந்து படிப்படியா ஏற்பட்டுப் போன சீர்குலைவு. அதற்கு நாங்கள் தள்ளப்படுகிறோம் என்று தெரியாமலேயே தள்ளப்பட்டவர்கள். எத்தனை இலங்கைத் தமிழர்கள் உங்கள் திஹார் சிறையில் இருக்கிறார்கள் என்று உங்களுக்குத் தெரியுமா? உலகத்து எல்லா வீதிகளிலும் எத்தனை அகதிகள்! ஏன்? என்ன காரணத்துக்காக?''



ஈசுவரன் உணர்ச்சிவசப்பட்டிருந்தான். பிரபு நெகிழ்ந்த நிலையில் மௌனமாகப் பலகாரத்தைச் சாப்பிட்டபடி அவன் பேச்சைக் கேட்டான். இவன் கண்களில் தீவிரம் இல்லை, மிதமிஞ்சிய சோகம் இருந்தது. இவன் நிச்சயமாகப் பயங்கரவாதியாக இருக்க முடியாது என்று தோன்றிற்று.

"உண்மையில் நாங்கள் படிப்படியாக முகமிழந்து போனோம். எங்கள் சமூகச் சீர்குலைவு அரசுடைய வெற்றி. இப்பத் தமிழனுடைய கலாசாரம் என்ன? பண்பாடு என்ன? ஊஹூம், ஒன்றும் நினைவில்லை. இதிகாச புராணத்தில்தான் தேட வேண்டும். இந்த ஸ்மசானத்திலிருந்து நாங்கள் மீண்டும் எழுணும்."

மறுபடியும் ஈசுவரன் புகையை மேலே விட்டுக் கண்களை மூடிக் கொண்டான்.

"இந்த உடன்படிக்கை அமுலுக்கு வரணும் என்று என்னைவிட ஆசைப்படுபவர் வேறு யாரும் இருக்க முடியாது." என்றான் கண்ணைத் திறக்காமலே.

பிரபு அவன் கையைப் பற்றி, "வரும் ஈசுவரன்; நம்பிக்கை வையுங்கள்" என்றான்.

ஈசுவரன் கண்களைத் திறந்து, 'நீ ஒரு பைத்தியக்காரன்' என்பது போல் சிரித்தான். "நீங்கள் சாப்பிட்டாச்சா? பின்னே வாருங்கோ. உங்களுக்குநேரமிருந்தால்நடக்கலாம்" என்று எழுந்தான்.

"ரெடி" என்று பிரபு எழ, இருவரும் பௌத்தலோக மாவத்தவில் நடக்க ஆரம்பித்தார்கள்.

"உங்கள் ஆசை ஏன் நிறைவேறாதென்னு பயப்படறீங்க. இடைக்கால அரசியல் அமைப்பைப் பத்தித் தினமும் பேச்சு வார்த்தை நடந்துக்கிட்டிருக்கு. அது வந்துட்டதுன்னு படிப்படியா நிலைமை சரியாயிடும்."

ஈசுவரன் நீண்ட பெருமூச்சு விட்டான். "நான் தமிழனைக் கண்டே பயப்படறேன். தமிழ் அரசியல் போராட்டத்திலே பயங்கரவாதம் நுழைஞ்ச நாளிலேர்ந்து தோன்றின பயம். பரஸ்பர நம்பிக்கைக்கே இனி இடமில்லே என்கிற பயம்."

"நீங்களும் ஒரு போராளின்னு கண்ணன் சொன்னான்."

"பயங்கரவாதின்னானா?"

"இல்லே."

"நல்லவேளை. வெறும் பயங்கரவாதத்தாலேயும் ஆயுத பலத்தாலேயும் வெளி நாட்டு ஆதரவாலேயும் மற்றவங்களை அமுக்கி இன்டைக்குப் பலத்தோடு நிற்கிற கூட்டத்தோட தன்மையை வெச்சு, எல்லாப் போராளிகளுமே பயங்கரவாதிகள் என்கிற முடிவுக்கு எல்லாரும் வருகிறார்கள். அது எங்களுடைய துரதிருஷ்டம். பயங்கரவாதம் நுழைஞ்சதும் நோக்கமே திசை திரும்பிப் போவதை நினைச்சு, நாங்கள் எல்லாம் எத்தனை கவலைப்பட்டோம்னு யாருக்கும் தெரியாது!"

"அதை வழிப்படுத்த எதுவும் செய்ய முடியலையா?"

"ஆயுத பலத்தை எதிர்த்து என்ன செய்ய முடியும்? அவர்களுடைய செயலால் எங்களுக்கிருந்த சிங்கள அனுதாபிகள் கூட எங்களிடமிருந்து விலகிப் போனார்கள்."

"அத்தனை ஆயுத பலம் எப்படி வந்தது ஈசுவரன்?"

ஈசுவரன் சிரித்தான்.

"இடதுசாரிக் கொள்கைகள் கொண்ட இயக்கங்களை அமுக்கப் பண உதவி செய்யும் வெளிச்சதிகளைப் பற்றி உங்களுக்குத் தெரியாதா? அதைப் பற்றி ஒரு தனி ஆராய்ச்சியே செய்யலாம். பாலுக்கும் காவல், பூனைக்கும் தோழன் என்கிற சக்திகள் அவை!"

தொடர்ந்து ஈசுவரன் பெரிதாகச் சிரித்தான்.

"அது ஒரு ஜேம்ஸ்பாண்டுக் கதை! இடையில் பாமர ஜனங்களைப் பற்றிக் கவலைப்படுகிறோமே நீங்களும் நானும்! நாம்தான் பைத்தியக்காரர்கள்!" — ஈசுவரன் மீண்டும் சிரித்தான். பிறகு தொடர்ந்தான்: "என் அப்பா தோட்ட முதலாளி. நான் ஒரு குட்டி ராசகுமாரன், சின்ன வயசிலே! என் அப்பா, தோட்டத் தொழிலாளிகளான இந்தியத் தமிழர்களை அடிக்கறதையும், கூலியைக் குறைச்சு ஏமாத்தறதையும் அடிமைபோல நடத்தறதையும் பார்த்து வளர்ந்தவன். புத்தருக்கு ஞானோதயம் ஏற்பட்டது போல இந்த ஏழைகளுக்கு ஏதாவது செஞ்சாகணும்னு, வீட்டை விட்டு வெறி பிடிச்சு வெளியிலே வந்தவன் நான். இப்ப அந்தக் கண்ணன் கூட என் எண்ணத்தைத் தவறாத்தான் எடை போடுவான். இப்படிப்பட்ட அதிர்ஷ்டத்துக்கு என்ன செய்யலாம்?"

இரு பக்கமும் நெடிதுயர்ந்த மரங்கள் இருந்த அந்த விசால வீதி தண்ணென்றிருந்தது. ஈசுவரனும் அவனது பிரச்னைகளும் உண்மைக்குப் புறம்பானவை, செயற்கையானவை என்று நம்ப வேண்டும் போலிருந்தது பிரபுவுக்கு.

"இப்பொழுது இந்திய அரசையே எடுத்துக் கொள்ளுங்களேன். ஆயுத பலம் அதிகமாக இருப்பதாலேயே ஓர் அமைப்பை மக்கள் பலமும் கொண்டதாக நம்புகிறது. அதிகபட்சம் அதனிடம் பொறுப்பைக் கொடுக்கப் பார்க்கிறது. ஜனநாயக அமைப்புக்கு அந்த அமைப்பு ஒத்து வரும் என்று யாருக்கும் இங்கே நம்பிக்கையில்லே; வெளியிலே சொல்லப் பயந்தாலும்."

"இடைக்கால அரசியல் அமைப்பிலே தான் எல்லாப் பிரதிநிதிகளும் இருப்பாங்களே!"

"எல்லாரும் எங்கே?" என்று ஈசுவரன் உதட்டைப் பிதுக்கினான். "அது அத்தனை சுலபமா ஏற்படப் போறதில்லே!"

இவன் ஓர் அழுமூஞ்சி என்று பிரபுவுக்கு மெல்லிய எரிச்சல் ஏற்பட்டது. "நீங்கள்தான் அன்னிக்குச் சொன்னீங்களே. எல்லாருக்குமே ஜனநாயகத்தைக் கண்டு பயம்னு!"

"சொன்னேன். அது உண்மைதான். அதை நினைச்சுத்தான் பயப்படறேன். ஜனநாயகம் எங்களுக்கு ரொம்ப அவசியமான தேவை என்கிற காரணத்தாலேயே இந்த நிலையைக் கண்டு பயப்படறேன்."

இன்னும் கொஞ்ச நேரம் இவனோடு பேசிக் கொண்டு நின்றால் நமக்குப் பித்துப்

# வேண்டுகோள்!

எனது கணவர் திரு. ஆர். சபாபதி ஆவுடைநாயகம் அவர்கள் திருநெல்வேலி சந்திப்பு ம. தி. தா. இந்து கல்லூரி மேல்நிலைப் பள்ளியில் தமிழ் ஆசிரியராக வேலை பார்த்து வருகிறார்கள். அவர்களுக்கு 40 வயது நடைபெறுகிறது. தற்பொழுது அவர்களுடைய இரண்டு சிறுநீரகமும் பாதிக்கப்பட்டுச் சென்னை அரசினர் மருத்துவமனையில் **Govt., General Hospital Nephrology** பிரிவு **Ward No. 46** இல் சேர்ந்து கடந்த இரண்டு மாத காலமாக மருத்துவம் செய்து வருகிறோம். அவர்களுக்கு **Diayalisis** சிகிச்சை செய்து கொண்டு இருக்கிறார்கள். அவர்களுக்கு மாற்றுச் சிறுநீரக ஆபரேஷன் அவசியம் செய்ய வேண்டும் என்று டாக்டர்கள் கூறுகிறார்கள். அடுத்த மாத இறுதியில் நடைபெற இருக்கும் ஆபரேஷன் செலவுக்கு அதிகமான பணம் தேவைப்படுகிறது.

எங்களுக்கு நான்கு பெண் குழந்தைகள் உள்ளன. எந்தவிதமான சொத்தும் வசதியும் இல்லாத நிலையில் உள்ளோம். தாங்களும் தங்களைப் போன்ற கருணை உள்ளம் கொண்ட பெரியோர்கள் மூலமாகவும் இயன்ற பொருள் உதவி செய்ய வேண்டி நான் பாங்க் ஆப் தமிழ்நாடு, திருநெல்வேலி டவுன் கிளையில் சேமிப்புக் கணக்கு எண்: 14409 தொடங்கியிருக்கிறேன்.

தமிழாசிரியர் ஒருவர் குடும்பத்தினைக் காப்பதற்கு உங்கள் மேலான உதவியினை வேண்டுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

S. காந்திமதி



அவர்: அரபு நாட்டிலேயெல்லாம் தப்புப் பண்ணினாக் கல்லாலே அடிப்பாங்களாமே... அந்தச் சட்டத்தை நம்ம நாட்டிலேயும் கொண்டு வந்தால் என்ன...?

இவர்: அவ்வளவு கல்லுக்கு எங்கே போறது...?

— வி. சாரதி டேச்சு.

---

பிடித்து விடும் என்று பிரபு நினைத்தான்.

இன்றைக்குப் பாராளுமன்றத்துப் பக்கம் போக வேண்டும் என்று திட்டம் போட்டிருந்தான். இன்று உடன்படிக்கையைப் பற்றி அமைச்சர்களின் கூட்டம் நடக்கப் போவதாகச் செய்தி வந்திருந்தது. உள்ளே செல்ல அனுமதி இல்லாவிட்டாலும் யாரிடமிருந்தாவது செய்தி சேகரிக்கலாம்.

ரூபவாஹினியின் காம்பவுண்டுச் சுவர் தெரிந்தது.

''நாம மறுபடி சந்திக்கலாம் ஈசுவரன். எனக்கு ஓரிடத்துக்குப் போகணும்'' என்று ஈசுவரனின் கையைக் குலுக்கி விடைபெறும் போது, காரணம் புரியாமல் அவனை நினைத்துப் பாவமாக இருந்தது. ஈசுவரன் சுத்தமான ஆங்கிலம் பேசினான். பரதேசியைப் போல் தோற்றமிருந்தாலும் உயர் குடியில் பிறந்தவன் என்று தெரிந்தது. தமிழரின் நிலையைப் பற்றி உண்மையாகக் கவலைப்படுபவன் என்று தெளிவாகப் புலப்பட்டது. இருந்தும் இவன் இப்பொழுது உபயோகமற்றவன். இவனால் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. எத்தனை பரிதாபம்! ஜயசீலன் கூட இவனுடைய நிலையில்தான் இருந்தான். சரேலென்று மீண்டும் சீலியாவின் நினைவு வந்தது. ஒரே கட்டடத்துக்குள் வசித்தும் அவள் எப்படி அத்தனை சாமர்த்தியமாக அவனிடம் அகப்பட்டுக் கொள்ளாமல் விலகிப் போகிறாள் என்று ஆச்சரியமாக இருந்தது.

கையுடன் இன்று காமிரா கொண்டு வர மறந்து போனதால் அவன் மீண்டும் வீட்டை நோக்கி நடந்தான்.

விஜயபாலசூர்யவின் அலுவலகம் வழக்கத்திற்கு மாறாக இன்று அதிகக் கலகலப்புடன் தென்பட்டது. பேச்சுக் குரல்கள் கேட்டன. பாலசூர்ய வந்து விட்டாரா என்று பார்க்க அவன் அலுவலகத்துக்குச் சென்றான்.

அவருடன் ஒரு நடு வயதுப் பெண்மணி காரசார வாதத்தில் ஆழ்ந்திருந்தாள். அவனைக் கண்டதும் பாலசூர்ய அதீதமாகப் புன்னகை செய்து, ''வாருங்கள் பிரபு! என்னுடைய ஒன்று விட்ட தங்கை மாயாவைச் சந்தியுங்கள். சிங்களத் தீவிரவாதி!'' என்றார்.

''என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள். என்னுடைய கருத்தெல்லாம் சரி என்று ஒரு நாளைக்கு நீ ஒப்புக் கொள்ளப் போகிறாய்'' என்றாள் மாயா.

பாலசூர்ய மீண்டும் சிரித்தார்.

''இன்னும் என்னவெல்லாம் வரக் காத்திருக்கிறதோ!'' என்று மாயா படபடத்தாள். ''இன்னிக்குப் பெரிய கண்டத்திலேர்ந்து ஜனாதிபதி தப்பினார். நாளைக்கும் அப்படியே தப்புவார் என்று என்ன நிச்சயம்?''

''என்ன விஷயம்?'' என்றான் பிரபு திகைத்து.

''உங்களுக்குத் தெரியாதா? இன்று சற்று முன் பாராளுமன்றத்தில் பெரிய வெடி விபத்து ஆகிவிட்டது. ஜனாதிபதி தப்பி விட்டார். இரண்டு மந்திரிகள் மோசமான நிலையில் இருக்கிறார்கள்.''

''அட, அங்குதான் போக வேண்டும் என்று கிளம்பினேன்!''

''இப்பொழுது யாரும் அந்தப் பக்கம் போக முடியாது!''

ஏதோ காரியமாக சீலியா அறைக்குள் நுழைந்து, மூலையிலிருந்த மேஜைக்குச் சென்றாள். அவனையோ மாயாவையோ கண்டு கொள்ளவில்லை.

''அரசாங்கத்தைத் தாக்குவதோடு இது நிற்காது விஜய!'' என்றாள் மாயா. ''உனக்கும் பயமுறுத்தல் வரும், தமிழ்ப் போராளிகளை வீட்டிலே வெச்சுக் காப்பாற்றுகிறாய், என்று!''

சீலியா சுவர்ப் பக்கமாய் நின்றிருந்ததால் அவள் முகபாவத்தைப் பிரபுவினால் கவனிக்க முடியவில்லை.

விஜய பாலசூர்ய மாயாவின் முதுகில் கைவைத்து வாசலுக்கு நகர்த்திக் கொண்டு சென்றார்.

''ஓ, கமான் மாயா, இந்தக் கிழவனால் அவர்களுக்கு ஏதும் ஆகப் போவதில்லை.''

பிரபு சட்டென்று முன்னால் நகர்ந்து சீலியாவுக்கருகில் சென்றான்.

''நீங்கள் தமிழ் பேசுபவர்தானே?'' என்றான்.

அவள் புருவத்தை வளைத்து அவனைப் பார்த்தாள்.

''நான் எந்த பாஷை பேசினால் உங்களுக்கென்ன?''

''ஒன்றுமில்லைதான். சும்மா ஆர்வம். நேற்று இரவு உங்கள் அறையிலிருந்து தமிழ்க் கவிதை ஒன்று கேட்டது.''

''என்னுடைய அறை என்று எப்படிச் சொல்கிறீர்கள்?''

''சும்மா ஊகம்தான்.''

''நீங்கள் அதில் நிபுணரில்லை'' என்று சொல்லிவிட்டு ஒரு ஃபைலின் காகிதத்தைப் புரட்ட ஆரம்பித்தாள்.

ஒரு வினாடி யோசித்து அவன் அவசரமாகச் சொன்னான்: ''இங்கே வேறு யார் தமிழர் இருக்கிறார்கள் என்று தெரியப்படுத்துங்கள். அந்தக் கவிதையை யாழ்ப்பாணத்தில் ஒருவர் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஜயசீலன் என்று ஒருத்தர்.''

காகிதத்தைப் புரட்டிக் கொண்டிருந்த விரல்கள் சட்டென்று நின்றன.

(தொடரும்)



பாரத் கலாச்சார் துவக்க விழாவில்......





# உயர்கலைகளை ரசிக்க ஓடிவரும் மாணவர்கள்!

"விநாயக சதுர்த்தியன்று ஒரு சிறு பிள்ளையார் பொம்மையைப் பள்ளிக்கு எடுத்துச் சென்றதற்காக என் மகளைப் பள்ளியிலிருந்து 'சஸ்பெண்ட்' செய்து விட்டார்கள். அவள் படித்தது ஒரு பிரபல கான்வென்டில். அதன் தலைமை ஆசிரியரின் இந்த நடவடிக்கையை எதிர்த்துப் போராடி 'சஸ்பென்ஷனை' ரத்து செய்ய வைத்து, என் மகளைப் பள்ளிக்கு அனுப்பினேன். ஆனால் அந்தச் சம்பவம்தான் நானே ஒரு கல்வி நிறுவனத்தைத் துவங்க வேண்டும், அதில் மாணவர்களைப் பரீட்சைக்கு மட்டுமே தயார்படுத்தாமல், அவர்களுக்குப் பாரதப் பண்பாட்டைப் புகட்ட வேண்டும், தேசிய ஒருமைப்பாட்டை உணர்த்த வேண்டும் என்ற எண்ணங்களை என்னுள் தோற்றுவித்தது." — கூறியவர் பத்மா சேஷாத்திரி பள்ளிகளின் தலைமையாசிரியை திருமதி. ஒய். ஜி. பார்த்தசாரதி.

இன்று ஆல் போல் தழைத்து வளர்ந்துள்ளன பத்மா சேஷாத்திரி பள்ளிகள். ஆனால், மாணவர்கள் பெரும்பாலும் டீ.வி. சினிமா, வீடியோ பார்ப்பதில்தான் அதிலும் கலை அம்சமோ வேறு உபயோகமோ இல்லாத நிகழ்ச்சிகளைப் பார்ப்பதில்தான் பொழுதைக் கழிக்கிறார்கள்; அவர்களுக்குக் கர்நாடக இசையிலோ, பரதநாட்டியத்திலோ அல்லது வேறு பாரம்பரியக் கலைகளிலோ நாட்டமே இருப்பதில்லை என்ற குறை திருமதி. ஒய். ஜி. பிக்கு இருக்கத்தான் செய்தது. இதற்கு ஒரு முக்கிய காரணம் மாணவர்களின் பெற்றோர் என்று உணர்ந்தார் அவர். குழந்தைகளுக்கு நல்ல நிகழ்ச்சிகளைப் பார்க்கவும் கேட்கவும் வாய்ப்புக்களை ஏற்படுத்தித் தர வேண்டிய பெற்றோருக்கே இக் கலைகளில் அதிக நாட்டம் இருக்கவில்லை. பள்ளி ஆசிரியர்களும் பெரும்பாலும் இப் பெற்றோர்களைப் போலத்தான் இருந்தார்கள்... பார்த்தார் திருமதி ஒய். ஜி. பி., பள்ளி மாணவர்களுக்கு மாலை நேரத்தில் இசை, நடன வகுப்புகள் எடுக்க முன்னணிக் கலைஞர்

மார்கழி மகோத்சவத்தில் நிகழ்ச்சிகள் வழங்கிய பத்மா சேஷாத்ரி கலைஞர்கள் சிலர்.



களை ஏற்பாடு செய்தார். அக் கலைஞர்களைக் கொண்டு ஆசிரியர்களுக்குச் செயல் விளக்க நிகழ்ச்சிகளை அளிக்கச் செய்தார். அப்படியும் நிலைமை ஓரளவுக்குத்தான் மாறியது. எனவே, பெற்றோர், மாணவர்கள், ஆசிரியர்கள் என்று எல்லோரையும் ஈடுபடுத்தும் வண்ணம் 'பாரத் கலாச்சார்' என்ற ஓர் அமைப்பை அண்மையில் தொடங்கியுள்ளார்.

செம்மங்குடி சீனிவாசய்யர் தலைமையில் கலைஞர்களும் கலைத்துறை அறிஞர்களும் அடங்கிய ஓர் ஆலோசகர் குழுவின் மேற்பார்வையில் பாரத் கலாச்சார் செயல்படும். மாணவர்களின் பெற்றோர்கள் பலர் இதன் உறுப்பினர்களாகச் சேர்ந்துள்ளனர். பள்ளி ஆசிரியர்கள் அனைவருமே அங்கத்தினர்களாகியுள்ளனர்.

பாரத் கலாச்சாரின் இரு முக்கிய நோக்கங்களை விளக்கினார் திருமதி. ஒய். ஜி. பி:

இளைஞர்களுக்குப் புகழ் பெற்ற, தலை

சிறந்த கலைஞர்களின் கலை நிகழ்ச்சிகளைக் கேட்கவும் பார்க்கவும் வாய்ப்பு ஏற்படுத்தித் தருவது.

இளம் கலைஞர்களுக்குத் தங்கள் திறமையை வெளிப்படுத்தச் சந்தர்ப்பங்கள் அளிப்பது.

பாரத் கலாச்சாரின் முதல் முயற்சியான 'மார்கழி மகோத்ஸவ்' கலைவிழாவில் பிரபலமான கலைஞர்களின் நிகழ்ச்சிகள் இடம் பெற்றுள்ளதோடு, பத்மா சேஷாத்ரியின் மாணவக் கலைஞர்களுக்கும் முன்னாள் மாணவக் கலைஞர்களுக்கும் வாய்ப்புத் தரப்பட்டது— அதுவும் மாலை ஆறு ஆறரை மணிக்கு— நாற்காலிகள் காலியாக இல்லாத நேரத்தில்!

பத்மா சேஷாத்ரி மாணவர்களுக்கு இந் நிகழ்ச்சிகளை இலவசமாகக் கேட்கவும் பார்க்கவும் வாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளது. அவர்கள் யாவரும் நிகழ்ச்சிகளைக் கூர்ந்து கவனிக்கும்படி தூண்ட, ஒவ்வொருவரும் பாரத் கலாச்சாரைப் பற்றி ஒரு 'டெர்ம் ரிப்போர்ட்' வழங்க வேண்டும் என்றும் கூறியுள்ளார் திருமதி ஒய். ஜி. பி.

'இவ்வாறு பாடத்திட்டத்தின் ஒரு பகுதியாகக் கலை நிகழ்ச்சிகளை ஆக்கினால், மாணவர்களுக்குக் கலைகளில் ஆசை குறைந்து பரீட்சைகளின்பால் ஏற்படும் வெறுப்பும் பயமும் இவற்றின்பாலும் தோன்றாதா?' என்று திருமதி ஒய். ஜி. பி.யைக் கேட்டோம்.

"எனது கல்வித்துறை அனுபவத்தின் அடிப்படையில் சொல்கிறேன்: நல்ல விஷயங்களை ஆரம்பத்தில் கொஞ்சம் வற்புறுத்தலுடன்தான் இளைஞர்களுக்கு அளிக்க வேண்டியிருக்கிறது. போகப் போகத்தான் அதன் அருமையை மாணவர்கள் உணர்வார்கள். எங்கள் பள்ளியில் படித்த ஒரு சிறுவன் அருமையாகப் பாடுவான். ஆரம்பத்தில் சக மாணவர்கள் அவனைக் கேலி செய்து வந்தார்கள். இதற்காக அவனைப் பாட வேண்டாம் என்று நான் கூறிவிடவில்லை. மாறாக, அடிக்கடி அவன் பாட மற்ற மாணவர்களைக் கேட்டு வரச் செய்தேன். போகப் போக அவன் திறமை அவர்களுக்குப் புரிந்து போயிற்று — அவன் பாடுவதற்கு முன்பே கைதட்ட ஆரம்பித்து விடுவார்கள். அந்த இளைஞன் வேறு யாருமல்ல, இன்று சிறந்த மேடைப் பாடகனாக விளங்கும் விஜய் சிவாதான்! பாரத் கலாச்சார் என்ற இந்த முயற்சியும் அதுபோலவே வெற்றிகரமாக அமையும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது" என்றார் திருமதி ஒய். ஜி. பி.

பாரத் கலாச்சார் ஒவ்வொரு மாதமும் இரண்டு நிகழ்ச்சிகளை மாணவர்களுக்குப் பள்ளி நேரத்திலேயே வழங்கவிருக்கிறது. அதற்கான அரங்கமும் பள்ளி வளாகத்திலேயே அமைக்கப்பட்டு விட்டது. தேசிய ஒருமைப்பாட்டை வளர்க்கும் நோக்குடன் குஜராத் தினம் கொண்டாடும் திட்டம் இருக்கிறது; விரைவில் மற்ற பள்ளி மாணவர்களையும் பாரத் கலாச்சார் நிகழ்ச்சிகளில் பங்கேற்கச் செய்யும் திட்டமும் உள்ளது.

— நமது நிருபர்

# "ஆகவே, 302 செக்ஷன் படி"

## பட்டுக்கோட்டை பிரபாகர்

புதிய தொடர்கதை ஆரம்பம்



**கல்கி**

17-1-88

பொங்கல் சிறப்பிதழில்

# இங்கே சந்தோஷம் விற்கப்படுகிறது!

இத்தாலியச் சிறுகதை:

மிலோனு ஓர் ஓய்வு பெற்ற அரசு ஊழியர். பருத்த சரீரமும் நரைத்த கேசமும் உடையவள் அவரது மனைவி எர்மீனியா. மகள் இயோவானுவோ அதற்கு நேர்மாறாக மெலிந்த உருவமும் சற்றை பழுப்புநிற உடல் வண்ணமும் கொண்டவள்.

இவர்கள் மூவருக்கும் வேறு எந்த வேலையும் கிடையாது. ஆகவே அன்றாடம் பிற்பகல் வீட்டை விட்டுப் புறப்பட்டு ஒரு நீண்ட வாக்கிங் போவார்கள். விடுதலைச் சதுக்கத்திலிருந்த அவர்களது இல்லத்திலிருந்து புறப்பட்டால், எர்மீனியா முன்சென்று வழி காட்ட, மற்ற இருவரும் உல்லாசமாகக் கோலா டீ ரியன்ஸோ வீதி முழுதுமுள்ள ஒவ்வொரு கடையின் வாயிற்புறக் கண்காட்சியையும் பார்வையிட்டுக் கொண்டே நடப்பார்கள். ரிஸார்க்கிமென்டோ சதுக்கம் வந்ததும் சாலையைக் கடந்து எதிர்ப்புறமாகச் சென்று, மிகவும் கவனத்துடன் ஒவ்வொரு கடையையும் பார்த்தபடி மீண்டும் விடுதலைச் சதுக்கத்தை வந்தடைவார்கள்.

இந்த வினோதமான பொழுதுபோக்கினால் மிலோனு குடும்பத்தினருக்குச் சில நன்மைகள் இருக்கத்தான் செய்தன. மிகவும் ஏழைமையான நிலையில் இருந்த அவர்களுக்குச் சினிமா, நாடகம், மற்றும் உணவு விடுதிகள் எட்டாத தூரத்தில் இருந்தன. ஆகவே தினந்தோறும் மாலை இரண்டு மணி நேரம் நீடிக்கும் இந்த நடை பயிலுதல் ஒரு நல்ல பொழுதுபோக்காக விளங்கியது. ஆரோக்கியத்துக்கு ஆரோக்கியம், சிக்கனத்துக்குச் சிக்கனம் என்று எர்மீனியா அற்ப சந்தோஷப் பட்டுக் கொள்வாள்.

ஒருநாள் மாலை வழக்கம் போல்



ரிஸார்க்கிமென்டோ சதுக்கத்தை அடைந்த போது, அவர்களுக்கு ஓர் ஆச்சரியம் காத்திருந்தது. நேற்று வரை புழுதிபடிந்து பழுப்பேறிக் கிடந்த அத்தெரு மூலையில் மந்திர வாதத்தால் எழுந்ததுபோல், மிக அழகான புதிய கடை ஒன்று முளைத்திருந்தது. பளீரென்று ஒளிர்ந்த அதன் குழல் விளக்கு வெளிச்சத்தில் அங்கு விற்கப்படும் பொருள் என்னவென்று ஊகிக்க முடியவில்லை. ஆகவே மூவரும் கடையின் கண்ணாடி ஜன்னல் அருகில் சென்று அரைவட்ட வடிவில் நின்று கொண்டு உற்று நோக்கினார்கள்.

இப்போதுதான் புலப்பட்டது — அங்கே விற்கப்படும் சரக்கின் பெயர் "சந்தோஷம்" என்பது. மிலோனு குடும்பத்தினர் அப்பொருளின் மகிமையைப் பலர் கூறக் கேட்டதுண்டு. காணும் பாக்கியம் பெற்றதில்லை. மிகவும் அரிதானதும்— அவர்கள் நெடுங்காலம் அதைக் கனவிலும் காணாததாலும்— சந்தோஷம் என்றொரு சரக்கு இருப்பதாகவே அவர்கள் எண்ணியதில்லை. ஏன், அப்படி ஒன்று உண்டா என்று சந்தேகப்பட்டதும் உண்டு.

எர்மீனியா இரவல் வாங்கி வரும் சஞ்சிகைகளில் அவ்வப்போது சந்தோஷம் பற்றிய நீண்ட கட்டுரைகள் வெளியாகும். அமெரிக்க நாட்டில் அது தாராளமாகக் கிடைப்பதாக அவள் படித்திருக்கிறாள். ஆனால் அமெரிக்கா நெடுந்தூரத்தில் இருந்தது. அங்குள்ள பத்திரிகைக்காரர்கள் சரடு விடுகிறார்களா என்று கண்டுபிடிப்பதும் கடினம்.

பண்டையக் காலத்தில் சந்தோஷம் உலகெங்கிலும் வியாபித்திருந்ததாக அறிந்திருந்த போதிலும் தமது வாழ்நாளில் அதைக் கண்டதாக மிலோனுவுக்கு நினைவு இல்லை.

ஆனால், இப்போது — இதே ஊரில், காலணிகளும் சமையல் பாத்திரங்களும் விற்பது போல — ஒரு கடையில் சந்தோஷம் விற்பனைக்குக் கிடைக்கிறது என்றால் அது ஆச்சரியமில்லையா? ஆகவேதான் கண்ணாடி ஜன்னல்களில் மூக்கைப் பதித்தபடி வியந்து நின்றனர் அம்மூவரும்.

அந்த விற்பனை நிலையம் அழகுற அமைந்திருந்தது. நல்ல இத்தாலிய மார்பிளாலான தரை, பளபளக்கும் குரோமியச் சட்டங்களில் இணைக்கப் பெற்ற ஆளுயரக் கண்ணாடி ஜன்னல்கள். உள்புறம் நீண்ட, விசாலமான கௌண்டர்கள். இளமையும் எழிலும் கூடிய துடிப்பான விற்பனையாளர்கள், அங்குமிங்கும் சிட்டுகள் போல ஓடிக் கொண்டிருந்தனர். கண்ணாடிச் சட்டங்களின் உள்புறத்தில் சிறிதும் பெரிதுமாகப் பல சைஸ்களில் —ஈஸ்டர் முட்டைகளைப் போல — சந்தோஷ வகைகள் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன. அவரவர் சக்திக்கு ஏற்றபடி வாங்கவல்ல சந்தோஷங்கள். சிலவற்றின் உருவத்தைப் பார்க்கும்போது அவை மனிதரின் வாங்கும் சக்திக்கு அப்பாற்பட்டவை— வெறும் காட்சிக்காக ஜோடனை செய்யப்பட்ட நகல்கள் என்று கூடத் தோன்றியது.

ஒவ்வொன்றிலும் ஜிகினைத்தாளில் கடையின் பெயர் அச்சிடப்பட்டு, விலை விவரம் நீண்ட கையெழுத்தில் வரையப்பட்டிருந்தது.

கிழவர் மிலோனு தமது சாதாரணமான கருத்தை உறுதியாகச் சொன்னார்:

"இது முற்றிலும் எதிர்பாராதது!"

"ஏன், அப்பா?" — குழந்தைத்தனமாகக் கேட்டாள் ஜியோவானு.

"ஏன் என்றால் இத்தனை நாளாகச் சந்தோஷத்தை இறக்குமதி செய்ய மிகுந்த செலவாகும்; ஆகவே, இத்தாலியர்கள் அது இல்லாமலே காலந்தள்ள வேண்டும் என்று சொல்லி வந்தார்கள். இப்போது என்னடாவென்றால் இந்தக் கடையில் சந்தோஷம் தவிர வேறு எதுவும் விற்கப்படவில்லை. பார்த்தாயா? இதை நம்ப முடிகிறதா?" — கிழவர் மிலோனு மிகுந்த கோபத்துடன் கூறினார்.

"இப்போது சந்தோஷம் மிகுதியாகக் கிடைக்கும் சுரங்கம் ஏதாவது அவர்கள் கண்ணில்பட்டிருக்கும்!" — ஜியோவானு.

"எப்படி வரும்? எங்கிருந்து வரும் ஒரு முழுச் சுரங்கம்? இத்தாலியின் வரலாற்றிலேயே எப்போதும் இங்கே எண்ணெய், நிலக்கரி, சந்தோஷம் இவை கிடைத்ததாகக் கேள்விப்பட்டதில்லை. அப்படி ஏதாவது தென்பட்டிருந்தால் எனக்குத் தெரியாமல் போகுமா? நானும்தான் தினமும் பேப்பர் படிக்கிறேன்! இது ஏதோ அயல்நாட்டுச் சரக்காக இருக்குமென்று எனக்குத் தோன்றுகிறது!" — மிகுந்த ஆவேசத்துடன் கூவினார் மிலோனு.

எர்மீனியாவுக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது.

"நீங்கள் ஏன் இப்படிச் சீறவேண்டும்? மேற்கில் சந்தோஷம் நிறையவே இருக்கிறது. இங்கே சுத்தமாக இல்லை. ஆகையால், கொஞ்சம் இறக்குமதி செய்வதால் என்ன குறைந்தா போய்விடும்?"

கிழவரின் தோள்கள் கோபத்தில் அதிர்ந்தன.

"இதுதான் பெண்புத்தி பின்புத்தி என்பது! இறக்குமதி என்றால் என்னவென்று உனக்குத் தெரியுமா? நாம் கோதுமை வாங்குவதற்காக வைத்திருக்கும் அந்நியச் செலாவணியை விரயமாக்குவது! எத்தனையோ ஆயிரம் பேர் பட்டினி கிடக்கும்போது, நமது அரிய டாலர்களை சந்தோஷம் வாங்க உபயோகிப்பது சுத்த முட்டாள்தனம்" !—

# ஆல்பெர்ட்டோ மொரேவியா

தான் சொன்னதையே திரும்பச் சொன்னார் மிலோனா.

"சந்தோஷமும் ஓர் அத்தியாவசியப் பொருள்தானே, அப்பா?" — இயோவானா கேட்டாள்.

"வெறும் அலங்காரத் தேவை அது! நாம் முதலில் நினைக்க வேண்டியது உணவைப் பற்றி. ரொட்டிதான் முதலில் — பின்புதான் சந்தோஷம்! ஆனால் இந்த முட்டாள் நாட்டில் எல்லாமே தலைகீழாகத்தான் நடக்கும். ஆகவேதான் நீங்கள் சந்தோஷத்துக்கு முதல் இடம் தருகிறீர்கள்!" — மிலோனா இரைந்தார்.

"நீங்கள் ஏன் இவ்வளவு சூடாகிப் போகிறீர்கள்? சந்தோஷத்தைச் சற்றும் விரும்பாதவர் நீங்கள் என்பதை நாங்கள் அறிவோம். ஆனால் எல்லோருமே உங்களைப் போல் இருப்பார்களா?" — எர்மீனியா யதார்த்தமாகக் கூறினாள்.

"நான் உங்களைப் போல் இல்லை!" — இயோவானா கூறினாள்.

"போதுமே உன் லட்சணம்!" — மிலோனா.

"லட்சணத்தில் என்ன குறைச்சலாம்? சந்தோஷம் என்றால் எப்படி இருக்கும் என்பதைத் தெரிந்து கொள்வதில் எனக்கு ஆசைதான். ஒரு சிறு துண்டு சந்தோஷம் கிடைக்குமானால் என்வசமுள்ள எதை வேண்டுமானாலும் தியாகம் செய்வேன்!" — இயோவானா உறுதியாகக் கூறினாள்.

"சரி சரி, நாம் போகலாம்!" — கைகளை உதறியபடி கூறினார் மிலோனா. அவரைப் பயபக்தியுடன் பின் தொடர்ந்தார்கள், தாயும் மகளும்.

கிழவரின் எரிச்சல் மாத்திரம் அடங்கவில்லை.

"இயோவானா, உன்னிடமிருந்து அப்படி ஒரு வாக்கியத்தை நான் எதிர்பார்க்கவில்லை!"

"ஏன், அப்பா?" — இயோவானா.



"மயாடி போட்டிருக்கேமே...! குளத்துத் தண்ணீர் மாதிரி இருக்கு...!"

"ஆமா... எந்தக் குளத்துலே தண்ணீர் இப்படி கடக்கடக் கிடைக்குதாம்?"

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.

"ஏனென்று கேட்கிறாய்?" சந்தோஷம் என்பது கறுப்புச் சந்தைக்காரர்களுக்குரியது. பெரிய பெரிய பணக்காரர்களுக்கு மட்டுமே அதைப் பெறும் தகுதி உண்டு. என் போன்ற ஒரு மாஜி அரசு ஊழியன் அதைப் பற்றிக் கனவு கூடக் காணக் கூடாது.

"நீ சொன்னது அர்த்தமற்ற சொல். என் பென்ஷன் பணம், மாதத்தில் பத்து நாட்கள் செலவுக்குக் கூடக் காணாது. நம் வீட்டின் ஒரு பகுதியை குடக்கூலிக்கு விட்டிருப்பதால் தான் நாம் ஒருவேளை சாப்பிட முடிகிறது. நீயோ சந்தோஷத்தை நாடுகிறாய். உன்னைப் பற்றி எனக்குப் பெரிய ஏமாற்றம்!"

இயோவானாவின் கண்களில் நீர் ததும்பியது. அவளது தாய் உதவிக்கு வந்தாள்:

"குழந்தையைச் சீண்டாவிட்டால் உங்களுக்குப் பொழுது போகாது! பார்க்கப் போனால் இவ்வளவு வருஷங்களாக அவளுக்கு வாழ்க்கையிலே நல்லதென்று ஏதாவது கிடைத்தது உண்டா? அவளும் சின்னஞ்சிறுசுதானே! சந்தோஷத்தை அவள் நாடுவதில் என்ன தவறு?"

"பேத்தல்! வெறும் பேத்தல்! கடுமையாக உழைத்து ஓய்வுபெற்ற அவளது தகப்பனே சந்தோஷம் இல்லாமல் காலம் தள்ளி விட்டான். இவளும் அப்படியே இருந்தால் போதும்!" — மிலோனா தொடர்ந்தார்.

அவர்கள் ரிஸார்க்கிமென்டோ சதுக்கத்தை அடைந்தார்கள். ஆனால் வழக்கம் போல் சாலையைக் கடந்து மறுபுறம் செல்லாமல் மீண்டும் வந்த வழியிலேயே நடக்கலானார் மிலோனா. அந்தக் கடை வாயிலில் நின்று உற்று நோக்கினார். நீண்ட நேரத்துக்குப் பின் பேசலானார்:

"எனக்கு என்ன தோன்றுகிறது, தெரியுமா? இது வெறும் போலிச் சந்தோஷம்!"

"எதைக் கொண்டு அந்த முடிவுக்கு வந்தீர்கள்?" — எர்மீனியா கேட்டாள்.

"நேற்றுத்தான் பேப்பரில் படித்தேன். அமெரிக்காவில் இத்தனூண்டு சந்தோஷத்தின் விலை பல நூறு டாலர்களாம். இங்கே மாத்திரம் இவ்வளவு மலிவாக எப்படி விற்க முடியும்? போக்குவரத்துச் செலவே எவ்வளவு ஆகும்? நிச்சயமாக இது போலிதான். அரசாங்கத்தின் சூழ்ச்சி வேலை!"

"ஆனால் ஜனங்கள் விரும்பி வாங்குகிறார்களே!" — எர்மீனியா கூறினாள்.

"ஏன் வாங்க மாட்டார்கள்! நாலு நாட்கள் போனால்தானே வண்டவாளம் தெரியும்? அப்போது வருந்துவார்கள் மடையர்கள்" — கிழவர் தீர்ப்புக் கூறினார்.

அவர்கள் நடை தொடர்ந்தது. இயோவானாவிற்கு வருத்தத்தை அடக்கிக் கொள்வதைத் தவிர வேறு வழியேயில்லை. தன்னைத் தானே தேற்றிக் கொண்டாள்: "சந்தோஷம் என்பது போலியாக இருந்தாலும்கூட ஒருநாள் அதை அடைந்தே தீருவேன்!"

தமிழாக்கம்: மீனாட்சி கிருஷ்ணா

## புத்தாண்டு பொங்கல் வாழ்த்துக்கள்



# கோ-ஆப்டெக்ஸ்
## கைத்தறி

தனித்தன்மை வாய்ந்த
வண்ணங்களுடன் வடிவங்களுடன்
கூடிய பருத்தி, பாலியெஸ்டர் மற்றும்
சிஃபான் சேலைகளை கோ-ஆப்டெக்ஸ்
வழங்குகிறது.

100 சதவிகிதம் அசல் பட்டு மற்றும்
தங்க சரிகைகளைக் கொண்டு நெசவு
செய்யப்பட்ட புதுமையான
பட்டுச்சேலைகளை இந்தப்
பண்டிகைக்காலத்திற்கென
கோ-ஆப்டெக்ஸ் அளிக்கிறது.

இந்தியாவின் மிகப்பெரிய கைத்தறி
கூட்டுறவு விற்பனை நிறுவனம்
கோ-ஆப்டெக்ஸ். அதற்குச் சொந்தமான
560 விற்பனைக்கூடங்கள் மூலமாக
கோடிக்கணக்கான
வாடிக்கையாளர்களின் தேவைகளை
பூர்த்தி செய்கிறது




பண்டிகைக் கால அரசாங்க
சிறப்புத் தள்ளுபடி.

IPR:2905/MS/87:Efficient

மதுக்கரை ஏ.சி.சி. சிமெண்ட் தொழிற்சாலையின் புகையால், சுற்றியுள்ள பத்துக் கிராமங்கள் பாதிக்கப்பட்டிருப்பது குறித்துப் 'புகை அரக்கனிடம் சிக்கிய கிராமங்கள்' என்ற தலைப்பில் (16.11.86 கல்கி இதழ்) எழுதியிருந்தோமல்லவா? இந்த ரீ—விசிட்டின் போது, கடந்த முறை சென்ற குரும்பப் பாளையம் கிராமத்துக்கு மீண்டும் சென்றோம். இப்போது காற்று கிராமத்துக்கு எதிர்த் திசையில் வீசுவதால், குரும்பப் பாளையத்தில் சிமெண்ட் புகை மண்டலம் பெருமளவு குறைந்திருந்தது. ஆனால் வீடுகளின் மேல் கூரைகளில் படிந்துள்ள சிமெண்ட் துகள்கள் அப்படியேதான் இருக்கின்றன.



* சிமெண்ட் ஆலை: விரைவில் தீரும் பிரச்னை!

சென்ற தடவை நமக்குப் பேட்டியளித்த கு. மா. அருச்சாமி வேலைக்குச் சென்றிருந்தார். குரும்பப் பாளையம் எம். ஜி. ஆர். மன்றத்தில் நின்று கொண்டிருந்த நாகராஜன் எங்களைக் கண்டதும் ஓடோடி மறைந்தார். ''நாகராஜன் ஏன் இப்படி ஓடி ஒளிகிறார்?" என்று ஆர். அருச்சாமியை (இந்தக் கிராமத்தில் அருச்சாமிகள் அதிகம்) கேட்டோம்.

''நாகராஜன் சிமெண்ட் தொழிற்சாலையில் தற்காலிகப் பணியாளராக இருக்கிறார். சென்ற முறை உங்களுக்குப் பேட்டியளித்ததன்

கோவை மாவட்ட ரீ — விசிட்:

* என். கோவிந்தன்: புது கலெக்டர்.



# அக்கறையோடு இயங்குகிறார்கள் அதிகாரிகள்...

விளைவாக, நாகராஜன், கு. மா. அருச்சாமி இருவரையும் நிர்வாகம் கூப்பிட்டு விசாரித்தது. அது தான், ஓடுகிறார்'' என்றார் ஆர். அருச்சாமி.

இவர் அவ்வூர் எம்.ஜி.ஆர். மன்றத்தின் துணைச் செயலாளர். புகைத் தொந்தரவைப் பற்றிக் கேட்டதற்கு, ''அது எப்படி ஸார் நிற்கும்? வருடத்துக்கு மூன்று மாதம் காற்று எதிர்த் திசையில் வீசுவதால் கொஞ்சம் பாதிப்புக் குறைவு; அவ்வளவுதான். ஏதோ புது யூனிட் போடுகிறார்கள். அது வேலை செய்ய ஆரம்பித்தால் இந்தத் தொல்லை குறையும் என்கிறார்கள். பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்'' என்றார் அவர்.

இறுதியில் இந்தப் புகை பற்றி ஏ. சி. சி. சிமெண்ட் ஆலையின் துணைப் பொது மேலாளர் குன்ஸ்ரூவைப் பார்த்தபோது, ''இங்கிலாந்து நாட்டுத் தொழில் நுட்பத்துடன் உருவாகி வரும் புது யூனிட் ஒன்று, வரும் ஜனவரி அல்லது பிப்ரவரியில் வேலை செய்ய ஆரம்பித்தவுடன்பிரச்னைபெருமளவுஒழிந்து விடும். அப்போது,இப்போது புகையோடு வெளிவரும் சிமெண்ட் துகள்கள் வெளியே வராமல் தடுக்கப்பட்டுவிடும். புகை மட்டும் தான் வெளியேறும். எந்த நிலையிலும் இந்தச் சிமெண்ட் புகையினால் ஏற்படுவது வெறும் 'தொந்தரவு' மட்டும்தானே ஒழியக் கெடுதல் ஏதுமில்லை என்பதுதான் பல நாடுகளிலும் செய்த ஆராய்ச்சிகளின் முடிவு...'' என்றார்.

'மக்கள் திண்டாட மனைரத்துண்டாடும் அரசு' என்ற தலைப்பில் பொன்னூண்டாம் பாளையம் என்ற கிராமத்தைப் பற்றி ஒரு கட்டுரை எழுதியிருந்தோம். கிராமத்தைச் சேர்ந்த நாராயணசாமியை மறுபடியும் சந்தித்த போது......

''கல்கிக்கு எ ப் ப டி நன்றி சொல்வதென்றே தெரியவில்லை. கல்கியில் கட்டுரை வெளிவந்த பிறகு இரண்டு முறை கலெக்டர் (அப்போது அபுல் ஹஸன்) வந்தார். ஒரு கி. மீ. தூரத்திலுள்ள செல்லம்



• நாகராஜன்: ஒடி ஒளிந்தார்.



பாளையத்தில் போர் போடப்பட்டு, எங்கள் கிராமத்தின் தண்ணீர்த் தொட்டியுடன் குழாய்கள் மூலம் இணைக்கப்பட்டது. இப்போது தண்ணீர் தடங்கலின்றி வந்து கொண்டிருக்கிறது. இது தவிர அடிபம்புகள் இரண்டு போடப்பட்டிருக்கின்றன. தண்ணீர்ப் பிரச்னையைத் தீர்த்து வைத்து விட்டது அரசு. ஆனால் எங்கள் கிராமத்தை ஒரே



• பொன்னுண்டாம்பாளையம்: பிரச்சனை தீர்ந்தது.

பஞ்சாயத்தில் சேர்க்கும் பணி மட்டும் இன்னும் நடைபெறவில்லையே'' என்று வருத்தப்பட்டார் நாராயணசாமி.

'**பா**ரதியார் பெயரில் உள்ள பல்கலைக் கழகம் பரிதாபக் கழகமாக இல்லாமல், பிரமாதக் கழகமாகப் பிரகாசிக்க வேண்டும்' என்ற நமது ஆதங்கத்தை வெளிப்படுத்தி ஒரு கவர் ஸ்டோரி வெளியிட்டிருந்தோம் அல்லவா? இப்போது நிலைமை எப்படியிருக்கிறது? நேரில் சென்றோம்.

பல்கலைக் கழக வளாகத்திற்குள் நுழைந்தவுடன், மாணவர்கள் நம்மைப் பிலு, பிலுவென்று பிடித்துக் கொண்டனர். ''இங்கே இன்னும் நிலைமை மோசமாகிக் கொண்டு போகிறதே தவிர, குறைந்தபாடில்லை. சென்ற முறை நீங்கள் எழுதியிருந்த கட்டுரையைப் படிக்கும் போது, ஏதோ நாங்கள்தான் விளைகக்குறை சொல்கிறோம் என்பது போலத் தெரிந்தது...'' என்று மீண்டும் குறைகளாக அடுக்கினார்கள். மறுபடியும் நாம் அவற்றைச் சுமந்து கொண்டு, துணைவேந்தர் சுப்பையனைச் சந்தித்தோம். நாம் ஒவ்வொரு புகாரைச் சொல்லும் போதும், ''இந்தக் குறையை எவன் சொன்னான்?'' என்று கேட்டுத்தான் பதில் கூறத் தொடங்கினார். சமீபத்தில் பத்திரிகைகளில் அடிபடும் விஷயங்களைப் பற்றியும் கேட்டோம்.

''ஃபெயில் ஆன ஒரு மாணவியைப் பட்ட உயர் படிப்பான எம். பி. ஏ. வில் சேர்த்தது குறித்து விசாரிக்க அமைக்கப்பட்ட சிண்டிகேட் துணைக் குழு, தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது குறித்து?''

''இதுபற்றி நான் பேசத் தயாரில்லை!''

''சட்டசபையில் அமைச்சர்



• நாராயணசாமி:
''கல்விக்கு நன்றி!''



• துணைவேந்தர்: சுப்பையன்.

பொன்னையன் இந்த அறிக்கையைப் பற்றிப் பேசினாரே!''

''அதுபற்றி நான் பேசத் தயாராக இல்லை.''

''அந்த அறிக்கையில், 'பல்கலைக் கழகம் தவறு செய்திருக்கிறது' என்று கூறப்பட்டுள்ளதாமே?''

''தயவு செய்து அதைப் பற்றிப் பேசாதீர்கள்.''

''இந்தப் பல்கலைக் கழகத்துக்கு வரும் பேராசிரியர்களும் மற்றவர்களும் வெகு விரைவில் பணியை விட்டு விட்டுச் சென்று விடுகிறார்களாம். அதற்கு என்ன காரணம்?''

''இங்கே இருக்கிற பேராசிரியர்களில் பலர் சென்னைப் பல்கலைக் கழகத்திலிருந்து வந்தவர்கள். தங்களை ஒன்றும் கேட்கக் கூடாது என்று சொல்பவர்கள். இந்தப் பல்கலைக் கழகத்துக்குப் பெருமை சேர்க்கும்



வகையில் அவர்கள் என்ன செய்திருக்கிறார்கள்? உங்களைப் போன்று வருபவர்களிடம் பொய்களையும் கற்பனைகளையும் எடுத்து விடுகிறார்கள். நான் ஏதாவது கேட்டால் எரிந்து விழுகிறார்கள். இவர்களை எப்படிச் சமாளிப்பது என்று எனக்குத் தெரியும். சுற்றுப்புறச் சூழல் பேராசிரியரும், விளையாட்டு மருத்துவம் (**Sports Medicine**) போதிக்கும் பேராசிரியரும் சென்றது, அவர்களுக்கு அதிகச் சம்பளமும் நல்ல வாய்ப்பும் கிடைத்ததால்தான். அதேபோல்தான் மற்றவர்களும். போகும்போது, அவர்கள் உண்மைக்கு மாறாக வேறு ஏதேதோ காரணங்களைச் சொல்லிக் கொண்டு வெளியே போனால் அதற்கு நானா பொறுப்பு?''

''ஒரு தனியார் நிறுவனம் நடத்தும் மருத்துவக் கல்லூரியில், ஸீட்களின் எண்ணிக்கையை நீங்களே அதிகப்படுத்தி விட்டீர்களாமே!''

''பல்கலைக் கழகம் சுதந்திரமாக இயங்கும் ஓர் அமைப்புதானே! எனக்கு அதிகாரமில்லையா?''

''அந்தக் கல்வி நிறுவனம் ஏற்கெனவே உள்ள ஸீட்களின் எண்ணிக்கைக்கு ஏற்பச் சில வசதிகளைச் செய்யவில்லையாமே?''

''யார் சொன்னது? எல்லாம் முறைப்படிதான் நடக்கின்றன. ராமச்சந்திரா கல்லூரியில் எப்படி ஸீட்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்தினார்களாம்? என்னை மட்டும் கேட்கிறீர்களே?''

''உங்களுக்குப் பிடிக்காத பேராசிரியர்களுக்கு மட்டும் புரோபேஷன் பீரியடை அதிகமாக்கி விடுகிறீர்களாமே! உதாரணமாக மக்கள் தொகை பற்றிய படிப்பில் பேராசிரியராக இருந்த டாக்டர் கிருஷ்ணமூர்த்தியின் புரோபேஷன் நீடிக்கப்பட்டுள்ளது என்கிறார்களே?''

''அதெல்லாம் சிண்டிகேட் செய்யும் முடிவு. நானாகச் செய்வதில்லை.''

''பேராசிரியர்கள் அனைவரும் தினமும் உங்களைப் பார்த்துச் 'சலாம்' செய்வதை விரும்புகிறீர்களாம். அப்படிச் செய்யாதவர்களை நீங்கள் எதிரிகள் போல் நடத்துகிறீர்களாம்! பல்கலைக் கழகத்தை ஏதோ உங்கள் சொந்த நிறுவனம் போல் நடத்துகிறீர்களாம், — சொல்கிறார்கள்...''

''யார் சொன்னது? யாரும் என்னை வந்து சந்திக்க வேண்டியதில்லை. வாங்குகிற சம்பளத்துக்கு ஒழுங்காக வேலை செய்யச் சொல்கிறேன். 'ஏதாவது ரிஸர்ச் பேப்பர் தயார் செய்யுங்கள் அல்லது லைப்ரரியில் போய்ப் படியுங்கள்' என்றுதான் சொல்கிறேன். யாரும் என்னைத் தினசரி வந்து பார்க்கத் தேவையில்லை.''

* பாரதியார் பல்கலைக் கழகம்: பெயருக்கேற்பப் பெருமை யுறுமா?

''பல்கலைக் கழகத்திலிருந்து உங்கள் வீட்டு வாடகை (உங்கள் சொந்த வீட்டுக்கே!) இரண்டாயிரம் ரூபாய் என்று வாங்கிவிட்டு, நகராட்சியில், சொத்து வரித் தொடர்பாகச் சொல்லும் போது மட்டும் ஐந்நூறு ரூபாய் தான் வாடகை என்று சொன்னீர்களாமே?''

— இந்தக் கேள்வியைக் கேட்டதும் துணைவேந்தரின் முகம் சிவந்து போயிற்று. ''நீங்கள் யார் இதைக் கேட்பதற்கு?'' என்று எரிந்து விழுந்தார்.

''ஆராய்ச்சிக் கட்டணம் மற்றும் விடுதிக் கட்டணம் ஆகியவை அதிகம் என்று சொல்கிறார்களே, மாணவர்கள்?''

''மிகவும் குறைவு. வேண்டுமானால் மற்ற பல்கலைக் கழகங்களைச் சென்று பாருங்கள்.''

''எங்கள் கேள்விகளுக்குப் பதில் சொன்னதற்கு மிக்க நன்றி!''

''யாரோ உங்களை நன்றாக மூளைச் சலவை செய்திருக்கிறார்கள். ஆறு வருடங்களுக்குள் இந்தப் பல்கலைக் கழகத்தில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்கள் பிரமிக்கத்தக்கவை. என் துரதிர்ஷ்டம், சில பேராசிரியர்கள் சரியாக அமையவில்லை. இளைஞர் சமுதாயத்துக்குப் பயன்தரத்தக்க பல புதுத் துறைகளைக் கொண்டு வந்திருக்கிறோம். மொழியியல் துறை, கம்ப்யூட்டர் துறையில் பொறுப்பாக இருக்கும் பேராசிரியர்கள் பல ஆராய்ச்சி பேப்பர்களைத் தயாரித்திருக்கிறார்கள்...'' என்று முடித்தார் துணை வேந்தர்.

எப்படியோ, பரஸ்பர குற்றச்சாட்டுக்கள், மனக் குறைகள் எல்லாம் நீங்கித் தமிழகத்தின் தவப்புதல்வனின் பெயரைத் தாங்கி நிற்கும் இந்தப் பல்கலைக் கழகம் அதற்கான தகுதியைப் பெருமிதத்துக்குரிய முறையில் பெற வேண்டும் என்பதே நம் வேண்டுகோள்.

**கோ**வை மாவட்ட ரீ — விசிட்டை முடித்துக் கொண்டு, கடைசியாக இப்போதைய கலெக்டர் என். கோவிந்தனைச் சந்தித்தோம்.

''பொன்னண்டாம் பாளையம் குடிதண்ணீர்ப் பிரச்னையைத் தீர்த்து வைத்ததற்கு நன்றி. ஆனால் அந்தக் கிராமத்தை ஒரே பஞ்சாயத்தில் சேர்ப்பது என்ன ஆயிற்று?'' — பிரச்னைகளை எடுத்துச் சொல்ல ஆரம்பித்தோம்.

''இதோ அதற்கான அறிவிப்பு. (எடுத்துக் காட்டினார்.) இது கெஜட்டில் வந்து நாற்பத்தைந்து நாட்களுக்குப் பிறகு பொன்னண்டாம்பாளையம் கிராமம் முழுவதும் கணியூர் பஞ்சாயத்தில் இணைக்கப்பட்டுவிடும்!''

''திருப்பூர் இரண்டாவது குடிநீர்த் திட்டம் எப்போது முடியும்?''

''இது சம்பந்தமாகச் சந்தோஷமான விஷயம் ஒன்றைச் சொல்கிறேன். முதல் திட்டம் போடும் போது, நாராயணசாமி என்பவரிடம் இருந்து நிலம் வாங்கப்பட்டது. இரண்டாவது திட்டத்திற்கும், தலைமை நீர் உந்தேற்றும் நிலையம் அமைக்க அவர் நிலத்தை அரசு எடுத்துக் கொள்ள விரும்பியது. அவர் கோர்ட்டுக்குச் சென்று தடை

வாங்கி விட்டார். அதுதான் திட்டத்தில் தாமதம். பின்னர் நான் சென்று நேரில் பார்வையிட்டேன். இரண்டாவது திட்டத்திற்கு நாராயண சாமியிடம் இருந்து குறைந்த அளவு நிலம் பெற்றுக் கொண்டு, மீதிக்கு இன்னொருவரின் நிலத்தை எடுத்துக் கொள்ள இருக்கிறோம். ஒப்பந்தம் போட்டாயிற்று. இனி பிரச்னை இருக்காது. விரைவில் முடிந்துவிடும்.''

தமிழக — கேரள எல்லையில் உள்ள வாளையாற்றில் மணல் எடுப்பது குறித்து?''

''தமிழக அரசும் சரி, கேரள அரசும் சரி, மணல் எடுக்கப் பர்மிட் எதுவும் கொடுக்கவில்லை. அந்த ஆற்றில் மணல் எடுப்பவர்கள் கடுமையாகத் தண்டிக்கப்படுவார்கள்.''

''அமராவதி பள்ளியில் படிக்கும் தமிழக மாணவர்களுக்கு உதவிப் பணத்தை அதிகரிப்பது தொடர்பாக...''

''அந்தப் பள்ளியின் நிர்வாகக் குழுவில் நானும் ஓர் உறுப்பினர். அடுத்த முறை குழு கூடும் போது, விவரங்களை அறிந்து நடவடிக்கை எடுக்கச் செய்கிறேன்.

''திருப்பூரில் அருணாசல முதலியார் என்பவர் தாம் வாங்கிய நிலத்தில் இன்னொருவர் அதுவும் அந்த நிலத்தையே விற்றவர் ஆக்கிரமிப்புச் செய்திருப்பது குறித்து முன்பே புகார் செய்திருந்தார். நாங்களும் எடுத்துச் சொல்லியிருந்தோம்...''

''அவர் என்னை உடனடியாக வந்து பார்க்கட்டும். ஆவன செய்கிறேன்.''

''வடவெள்ளி கிராமத்தை ஒட்டியுள்ள சூப்பர் கார்டன் அவென்யூவை வீட்டுவசதி வாரியம் ஆர்ஜிதம் செய்யப் போவதாக அறிவிப்புச் செய்திருந்ததே?''

''இது சம்பந்தமாக நான் வீட்டு வசதி வாரியத் தலைவரிடம் பேசினேன். ஏற்கெனவே வீடு கட்டியுள்ளவர்களுக்கு ஓர் ஆபத்தும் வராது.''

''சத்திய மூர்த்தி நகரில் ராதாமணி என்பவர் தமது வீட்டை அடுத்து வொர்க்ஷாப் நடைபெறுவது பற்றிப் புகார் கூறி இருந்தார். அதன் பிறகு 75 ரூபாய் அபராதம் போட்டும், வொர்க்ஷாப் தொடர்ந்து நடைபெறுவதாகவும், இன்னும் பல புது மிஷின்கள் வந்திருப்பதாகவும் எங்களுக்கு மீண்டும் புகார் செய்திருக்கிறார்.''

''அபராதம் போட்டதிலிருந்து வொர்க்ஷாப் நடத்துபவர் குற்றம் செய்திருக்கிறார் என்பது நிரூபணம் ஆகிவிட்டது. மின் வாரியம் நடவடிக்கை எடுத்து மின் சப்ளையை நிறுத்த வேண்டும். ஆவன செய்கிறேன். இவற்றோடு இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு சில புதிய விஷயங்களையும் சொல்கிறேன். பல்லடம் — அவிநாசி ஆகிய வட்டாரங்களில் தொடர்ந்து இருந்து வரும் வறட்சியைச் சமாளிக்கப் பத்துக் கோடி செலவில் திட்டம் தயாரித்து இருக்கிறேன். (காட்டுகிறார்). மத்திய அரசின் உதவியுடன் செயல்படப் போகும் இந்தத் திட்டத்தால், அந்தப் பகுதியில் குடிதண்ணீர்ப் பிரச்னை தீரும். கால்நடை வளர்ப்பு, பட்டுப் பூச்சி வளர்ப்பு, விவசாய — பொறியியல் ஆகிய துறைகளில் முன்னேற்றம் ஏற்படும்.

''மேலும் இந்த மாவட்டத்தில் ஓய்வு பெறும் அரசு ஊழியர்களுக்கு அடுத்த நாளே எல்லா பாக்கித் தொகைகளும் கொடுக்கப்பட்டு விடுகின்றன. தியாகிகளை மரியாதை செய்யும் விதத்தில், தனியார் நிறுவனங்களோடு தொடர்பு கொண்டு, ஐந்து தனியார் ஆஸ்பத்திரிகளில் அவர்களுக்கு இலவச மருத்துவம் கிடைக்க ஏற்பாடு செய்துள்ளோம். சுற்றுலாவை மேம்படுத்த வாளா குளத்தை அபிவிருத்தி செய்து, படகு ஓட்டுவதற்கு ஏற்பாடு செய்யப்படும். வால்பாறையில் யூத் ஹாஸ்டல் அமைக்கப்பட்டுள்ளது. அமணலிங்கேஸ்வரர் கோயிலை ஒட்டியுள்ள மலையில் பஞ்சமூர்த்தி விக்ரகம் உள்ளது. ஆனால் போகும் பாதை சரியில்லை. முறையான ரோடு போடப் போகிறோம். வைதேகி அருவிக்குச் செல்ல விரைவில் நல்ல பாதை அமையவிருக்கிறது...''

தாம் எடுக்கப்போகும் நடவடிக்கைகளைப் பற்றி விரிவாக விளக்கினார் கலெக்டர் என். கோவிந்தன். அக்கறையோடு இயங்கும் அதிகாரிகளைச் சந்தித்த மனத் திருப்தியோடு விடை பெற்றுக் கொண்டு வந்தோம்.

— நமது நிருபர்.

# அடுத்த இதழ்...



- வெங்சர்க்கார் வெல்வாரா?
  — COVER STORY

- 'முகம்தான் சிவப்பு; மனமோ கறுப்பு!'
  — வரதட்சணைக் கொடுமைக்குப் பலியான சசிகலாவின் சோகக் கதை.

நீங்கள் கேட்டவை — தராசு

# பிரதமர், புத்தாண்டு வாழ்த்து அனுப்ப மாட்டாராமே..?



* கடுகு ஆராய்ச்சி

* வி. எம். ராஜேந்திர காந்தி, தூத்துக்குடி—3.

? 'மாவட்டக் கலெக்டர்களைப் பிரதமர் நேரடியாகச் சந்திப்பது தவறு' என்று கேரள முதல்வர் பேசியுள்ளார். தமிழக நிதியமைச்சரோ, 'அது சரிதான்' என்கிறார். இதில் எது சரி, எது தவறு?

! நாயனார் கூறுவதே சரி. கலெக்டர்கள் மாநாடு ஒன்று நடந்து, அதற்குப் பிரதமர் அழைக்கப்பட்டால் மட்டுமே வரலாம்; தமது யோசனைகளையும் தெரிவிக்கலாம். அப்போது கூட அந்த யோசனைகளை ஏற்பதும் ஏற்காததும் மாநில அரசின் உரிமையே. ஏற்கெனவே அதிகாரங்கள் மத்தியில் குவிந்திருக்க கலெக்டர்களையெல்லாம் கூடத் தமது நேரடி அதிகாரத்துக்குள் கொண்டு வருவது என்று பிரதமர் ஆரம்பித்தால் அப்புறம் மாநில அரசு என்று ஒன்று எதற்கு? மாநில சுயாட்சி என்பதே அர்த்தமற்றுப் போகும்.

* எஸ். அருள்வேலன், திருக்கழுக்குன்றம்.

? 'நான் முதலில் தமிழன்; பிறகுதான் இந்தியன்' என்ற தி. மு. க. எம். பி. யான சோமுவின் கூற்றையும் 'நான் முதலில் இந்தியன்; பிறகுதான் தெலுங்கன்' என்ற தெலுங்குதேசத் தேர்தல் கமிட்டி அமைப்பாளர் சந்திரபாபு நாயுடுவின் கூற்றையும் ஒப்பிட்டுச் சொல்லுங்கள் பார்க்கலாம்!

! பின்னவர் கூறியது, தான் ஏதும் தேசிய நீரோட்டத்திற்கு எதிரியானவன் அல்லன் என்பதற்காகத்தான். ஆனால் சோமுவின் கூற்று தவறானது அல்ல. ஏனெனில் ஒவ்வொரு மனித மனமும் முதலில் தான்... அடுத்து தன் மனைவி, குழந்தைகள், குடும்பம்... பிறகே தனது அண்டை வீட்டார், உறவினர்கள், தன் ஊரார், தேசத்தார்... என்று எண்ணுகிறது. அதுதான் இயற்கை. இந்நிலையில் 'நான் முதலில் தமிழன்; பிறகே இந்தியன்' என்ற உணர்வுதான் போலித்தனமில்லாத உணர்வு என்பதும் அந்த உணர்வு உள்ளதாலேயே அவன் குறுகிய எண்ணமுடையவன்— தேச விரோதி என்று ஆக மாட்டான் என்பதுமே என் கருத்து.

* மு. செந்தில்வாசன், திருமருகல்.

? 'ராஜீவ் காந்தியைத் தவிர பிரதமர் பதவி வகிக்க வேறு யாருக்கும் யோக்கியதை இல்லை' என நாடாளுமன்றக் கழகக் குழுத் தலைவர் குழந்தைவேலு கூறியுள்ளதைப் பற்றி?

! சோப்புப் போடுவதற்கும் ஓர் அளவுண்டு. இப்படியா ஒரே மூச்சில் முழு சோப்புக் கட்டியையும் கரைப்பது!

* கீதப் பிரியன், விக்கிரமசிங்கபுரம்.*

? எம். எல். ஏக்கள், அமைச்சர்கள் மற்றும் பொதுத் துறையில் உள்ளவர்கள் மீதான ஊழல் புகார்கள் பற்றி யார் வேண்டுமானாலும் வழக்குத் தொடர வசதியாகக் கேரள அரசு சட்டத் திருத்தம் கொண்டு வந்துள்ளதே!

! வரவேற்கிறேன். முக்கியமான விஷயம், குற்றச் சாட்டுக்களை நிரூபிக்க முடியவில்லையென்றால் குற்றம் சுமத்தியவருக்கு ஜெயில் தண்டனையும் அபராதமும் உண்டு என்ற ஷரத்து நீக்கப்பட்டதுதான். மேலும் குற்றம் நடந்திருப்பதாக நிரூபணமானால் குற்றவாளி மீது நடவடிக்கைகள் எடுக்க மூவர் அடங்கிய விசாரணைக் கமிஷனுக்கே அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. மூன்றாவது சிறப்பு அம்சம், பொது வாழ்வில் அல்லது பொதுத் துறையில் உள்ள ஒவ்வொருவரும் ஆண்டு தோறும் தம்முடைய, தமது நெருங்கிய உறவினர்களுடைய சொத்துக்கள் பற்றியும் கடன்கள் பற்றியும் கமிஷனிடம் கணக்குச் சமர்ப்பித்தாக வேண்டும் என்று விதிக்கப்பட்டிருப்பதாகும். நாயனாரின் இந்தத் துணிச்சல் வேறு எத்தனை மாநில முதல்வர்களுக்கு இருக்கிறது? சிலராவது நிரூபித்தால் நன்றாயிருக்கும்.

* கே. வி. எஸ். மணியன், குடியாத்தம்.

? 'ராகவேந்திரரைப் பிரார்த்தனை செய்தேன். புவனகிரியில் பெட்ரோல் கிடைத்தது' என்று அமைச்சர் வி. வி. சாமிநாதன் கூறுகிறாரே?

! இதுபற்றி வருத்தப்பட வேண்டியிருந்தால், அல்லும் பகலுமாகக் கச்சா எண்ணெய்க் கிணறுகளைக் கண்டுபிடிக்கக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் எரிவாயு மற்றும் எண்ணெய்க் கமிஷன் (ஓ. என். ஜி. சி.) விஞ்ஞானிகளும் பொறி இயல் நிபுணர்களும்தான் வருத்தப்பட வேண்டும். நமக்கென்ன வந்தது!



* அசலான சட்டம்!



* சோப்பு!



* முதலில் தமிழன்!



* நாம் நாம்!

* பா. புஸ்பமுருகேசராசன், சின்னமனூர்.

? நாட்டில்வறட்சிதாண்டவமாடிக்கொண் டிருக்கும் இந்த நேரத்தில் மாதவராவ் சிந்தியாவின் மகள் திருமணத்திற்குக் கோடிக் கணக்கில் செலவழிக்கப்பட்டுள்ளதே?

! அவருடைய சொந்தப் பணம் செல வழிக்கப்பட்டதில் ஏதும் தவறிருப்பதாகக் கருதவில்லை. ஆனால் அதற்காக மீறப்பட்ட அரசு விதிமுறைகள் எத்தனையெத்தனை? உண்மையிலேயே நமது பிரதமர் மிஸ்டர் கிளீனாக இருப்பாரானால் இந்நேரம் மாதவ ராவ் சிந்தியாவை அமைச்சரவையிலிருந்து டிஸ்மிஸ் செய்திருக்க வேண்டும்.

* எஸ். செந்தில்குமார், திருமருகல்.

? பிரதமரின் தமிழக விஜயம் பற்றி?

! அந்த இரண்டு நாளும் சென்னைப் போக்குவரத்தே ஸ்தம்பித்துப் போனது. பிரதமர் செல்லும் சாலைகளிலெல்லாம் போக்குவரத்தை நிறுத்தி வேறு வழிகளில் திருப்பி விட்டதால் ஏகப்பட்ட நெரிசல். ஆனால் அந்த நெரிசல்களை ஒழுங்குபடுத்த அங்கெல்லாம் போதுமான போக்குவரத்துப் போலீஸார் போடப்படவில்லை. அதனால் கஷ்ட நஷ்டமடைந்தோர் ஏராளம். எழி லகம் முன்பு— சென்னைக் கடற்கரைச் சாலை யில் அலுவலகம் வருவதற்காகச் சாலையைக் கடந்த கமலாவதி என்ற பெண்மணி திரு வள்ளுவர் பஸ்ஸால் மோதப்பட்டு அந்த இடத்திலேயே மரணமடைந்தார். போலீ ஸார் போக்குவரத்தை ஒழுங்குபடுத்தியிருந் தால் அந்த அநியாய மரணம் தடுக்கப்பட் டிருக்கும் என்பது மட்டுமல்ல; விபத்து நடந் தவுடன் ஓடி வந்த போலீஸார், உடனடியாக அந்த இடத்தைக் குறியிட்டு அடையாளம் கூடச் செய்யாமல், போட்டோ எடுக்காமல் அவசர அவசரமாக உடலை ஆம்புலன்ஸில் ஏற்ற முயன்றது ரொம்பவும் கண்டிக்கத்தக் கது. நல்ல வேளையாகச் சுற்றியிருந்த அரசு ஊழியர்களால் அந்த அநியாயம் தடுக்கப் பட்டுச் சட்ட விதிமுறைகள் பின்பற்றப்பட் டன என்பதால் சிறிது ஆறுதல்.

* கே. வி. நாதன், நெய்வேலி.

? மூதறிஞர் ராஜாஜியின் பிறந்த தினத்தன்று அமெரிக்க — ருஷ்ய அணு ஆயுதக் குறைப்பு ஒப்பந்தம் ஏற்பட்டுள் ளதைக் கவனித்தீரா?

! அணு ஆயுதக் குறைப்புக்காக அரும் பாடுபட்ட ராஜாஜியின் பிறந்த நாளன்று ஒப்பந்தம் கையெழுத்தானது— அது தற் செயலாக நிகழ்ந்ததாக இருந்தாலும் கூட— பொருத்தமானதொரு நிகழ்ச்சிதான். அவர் ஆன்மா நிச்சயம் இதை வரவேற்று வாழ்த்தி யிருக்கும்.

* கா. அ. கிருஷ்ணன், ஆழ்வார் திருநகர்.

? வறட்சியை முன்னிட்டுப் பிரதமர் புத்தாண்டு வாழ்த்துக்கள் அனுப்பப் போவ தில்லையாமே?

! கடுகு போகும் இடம் ஆராய்வார்; பூச ணிக்காய் போகும் இடத்தைக் கண்டு கொள்ள மாட்டார்.

* க. சக்திவடிவேல், செம்பியம்.

? மத்திய அரசிடம் அதிகாரக் குவியல் அதிகமாக உள்ளதென்று ஏழு மாநில முதல் வர்கள் கண்டனம் தெரிவித்திருப்பது குறித்து?

! அது முற்றிலும் உண்மையே. உதாரணத் துக்குக் கேரளாவின் இன்றைய அரசுக்கு ஒரு பொருளாதார நெருக்கடியை மத்திய அரசு திட்டமிட்டு உருவாக்கியுள்ளதையே கூறலாம். முன்னர் கருணாகரன் அமைச்சு ரிசர்வ் வங்கி வழங்கியுள்ள கடன் வசதிக் கும் அப்பால் கடன்பட்டுப் போனபோது, இரு சந்தர்ப்பங்களில், அந்தக் கடனை ஐந் தாண்டுத் திட்ட அட்வான்ஸாக மாற்றிக் கொடுத்து உதவியது மத்திய அரசு. ஆனால் அந்த வசதியை இப்போது நாயனார் அமைச் சுக்குத் தர மறுக்கிறது. தேசிய சேமிப்புத் திட்டம், மத்திய அரசின் வரிகள் ஆகியவற்றில் கேரள அரசுக்குச் சேர வேண்டிய பணத்தைக் கணக்கிட்டால் கூடப் போதும், கேரள அரசு கடன் எல்லையைத் தாண்டி விடவில்லை என்பது நிரூபணமாகும் என்று நாயனார் எடுத்துக் காட்டியும் மத்திய அரசு ஒத்துழைக்க மறுத்து, ஒரு தலைகுனிவை மாநில அரசுக்கு ஏற்படுத்துகிறது.

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

ஜி. ஜெய்சங்கர் (ஜெப்பிரியன்),
39-C/10, மீனாட்சிபுரம் தெரு,
விக்கிரமசிங்கபுரம், அம்பை வட்டம்,
— 627 425.







# ஒரு நல்ல ஆரம்பம்...

# ஒரு நல்ல ஆரம்பம்... தொடருமா?

ஆகுதி கொட்டாமல்
சூரியப் பிரசவம் — இனி
நித்தம் கிழக்கில் நிகழுமோ?

எம்
எதிர்காலம் மூச்சுவிட
நச்சு நதிகளில்
நனையாத காற்றுக் கிடைக்குமோ?

அச்சத்தை
நட்சத்திரங்கள்
இரவுகளிடம் முணுமுணுப்பது
இனி
இல்லையாகுமோ?

விண் வெளி
மண்ணின் ஒவ்வோர் அரும்புக்கும்
நம்பிக்கையைப்
பிரகடனம் செய்யுமோ?

பொய்களைக்
குறைப்பதாய்ச் சுவரொட்டி
போடலாம் — அதனால்
மெய்யின் மேனியில்
கொப்பளங்கள் ஆறுமோ?

வேங்கைகள்
நகம் வெட்டிக் கொள்வதாய்
விளம்பரம் செய்கின்றன
மான்கள்
மகிழ்ச்சி யடையுமோ?

கத்தியின் நீளம்
குறைக்கப்படுவதால் — மாறுமோ
கசாப்புக் கடைகள்
கருணை இல்லங்களாய்?

ஆயுதக்
குறைப்பு என்பது போர் வெறியின்
அவரோகணமே!

துப்பாக்கிகளின்
மவுன விரதத்தை நம்பி,
வாழ்க்கை —
ஆடி மகிழப்
புன்னகைக் காட்டுக்குப்
புறப்பட்டுப் போகுமா?

ஏவுகணைச் செலவுகளில்
எல்லோர்க்கும்
ரொட்டி சுட்டுத் தர
வல்லரசுகள் முன்வருமா?

வெள்ளைப் புறாவின்
கூட்டுக்கு
விதானம் அமைக்க
அணுக்கதிர்களை ஆறவைப்பார்களா?

ஆயுதப்
பட்டறைகள்
சமாதான தேவதைக்கு
அணிகலன் தயாரிக்குமா?

எமது
கரைகளில் தினமும்
பிணங்களை எண்ணிய
துயரப் பொழுதுகள் தொலையுமா?

கடல்களின்
பிடரிகளைக் கப்பல்கள் தடவ,
பூக்களுக்குள்ளிருந்து
தீவுகள்
கையசைக்குமா?

போர் நம்மை
ஒழிக்கும் முன்
போரை நாம் ஒழிப்போமா?

கடைசி
வெடிகுண்டின் திரிகளை எடுத்துச்
சமாதானத்தின்
முதல் விளக்கு ஏற்றுவோமா?

**தமிழன்பன்**



# கிராமத்து மின்னல்

அந்தக் கிராமத்து மக்கள் அத்தனை பேரும் ஓடி வருகிறார்கள். தோப்பில் கொலையுண்டு கிடக்கும் ஆசாமியைப் பார்க்கிறார்கள். பஞ்சாயத்தைக் கூட்டிக் கொலை செய்த ரேவதியைப் போலீசில் ஒப்படைப்பது என்று தீர்மானிக்கிறார்கள். ரேவதி கிராமத்தின் தற்காலிகச் சிறையில் அடைபட்டு 'ஆதென கீர்த்தனாரம்பத்திலே' என்ன நடந்ததென அசை போடத் தொடங்குகிறார். பரபரப்பான துவக்கம்தான். துவக்கம் மட்டும்!

கவுண்டமணி பேசினாலே தியேட்டரில் சிரிப்பலை அதிர்கிறது. பேசாமல் காமெடியனாகவே இருந்திருக்கலாம். கதாநாயகப் பதவிக்கு ஆசைப்பட்டு இப்படியும் இல்லாமல், அப்படியும் இல்லாமல் திரிசங்கு சொர்க்கத்தில் தவித்து — ஹூம்!

செந்தாமரைக்கு வித்தியாசமான வேஷம். அவர் இவ்வளவு வழிசல் வழிந்து பார்த்ததில்லையா? ரசிக்கும்படிதான் இருக்கிறது.

ராமராஜன் — எவ்வளவு சொன்னாலும் இவர் மாற்றிக் கொள்ளப் போவதில்லை போல. . அதே விளக்கெண்ணெய் முகபாவம். செயற்கைச் சிரிப்பு, செயற்கை நடிப்பு. இவர் டைரக்டராக வேறு இருக்கிறாரே, எப்படி?. போதும் போதாதற்கு டூயட்டின் போதெல்லாம் இவர் கொடுக்கும் 'அர்த்த நாரி' டான்ஸ் மூவ்மெண்ட்களைப் பார்த்துவிட்டுத் தியேட்டரே வழித்துக் கொண்டு சிரிக்கிறது.

கிராமத்து மின்னல், ரேவதிதான். கல்யாணம் செய்து கொள்ளும் போது படவுலகைத் திரும்பிப் பார்க்க மாட்டேன் என்று வீரச் சபதம் செய்துவிட்டு மறுபடி பிரவேசம். உழக்கு சைஸில் இருந்து கொண்டு என்ன குதி குதித்தார், அப்படி ஒன்றும் இந்தப் படத்தில் சாதித்து விட்ட மாதிரி தோன்றவில்லையே, என்று மனத்தில் எழும் நினைப்பை உதாசீனம் செய்ய முடியவில்லை.

'ரெட்டைக்கிளி சுத்தி வந்த' பாட்டு கேட்பதற்கு இனிமை. கங்கை அமரன் — இளையராஜா ஜோடிக்கு ஒரு ஷொட்டு. 'அருவா' வாடி எடுத்தே, சோத்தைப் போட்டுட்டே, தண்ணி ஊத்தினே' பாட்டு? ஐயோ பாவம், வாலி!

செல்வகுமாரின் கிராமத்து வசனத்தில் செயற்கை நெடி அதிகம்.

அட, அட, அட. பின் பாதிக் கதையை இப்படிக் கூட சொத சொதக்க வைக்க முடியுமா ஒருவரால்!

மொசைக், எனாமல் பெயின்டிங், திரைச் சீலைகள் என்று எந்தவித அலங்காரமும் இல்லாத, ஏன், கட்டியே முடிக்கப்படாத வீட்டைக் காட்டுகிறார் டைரக்டர் கே. ரங்கராஜ்.

யார் குடி போவதாம்?

— ஜெயமன்மதன்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 431543, 434157.
ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 600 034. போன்: 473389.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 280/-; விமானத் தபால் ரூ. 680/-
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/-; விமானத் தபால் ரூ. 340/-.

பல்சுவை அனுபவம்!

பெரிய அளவு! அருஞ்சுவை!

நியூட்ரின்

SuperStar

சுவை மிக்க உன்னத டா:பி







ட்வின்ட்ரீட்

டிலைட்

டாப்கிம்

ஆனந்த அனுபவம்!

CLARION/NC



nutrine

நியூட்ரின் கன்பெக்ஷனரி கம்பெனி (பி) லிமிடெட், சித்தூர்-517 002,
ஆந்திர பிரதேஷ்